3692



M. R. Ry. Dewan Bahadur

**V. K. Ramanujachariar Avl.**

Founder of the Union Bank Ltd., & who was Managing Director of the same for many years since it was started.

3692



M. R. Ry. Rao Bahadur

**N. Krishnaswami Aiyangar Avl.**

Chairman of the Board of Directors

The Union Bank Ltd., Kumbakonam.

Dedicated

By kind permission to

M.R.Ry. Dewan Bahadur

V. K. RAMANUJACHARIAR, Avl.,

Retired Secretary to the Board of Revenue

and

for many years Managing Director of

The Union Bank Ltd.,

Kumbakonam

by

His Grateful Servant

G. BALASUBRAHMANYAM.

many years and to whom I owe the little knowledge I have acquired on the subject. I owe a debt of gratitude to M.R.Ry. Rao Bahadur N. Krishnaswami Aiyangar Avl., Chairman of the Board of Directors of the Union Bank Ltd., Kumbakonam, who has all along been my benefactor and who was kind enough to write an introduction to this humble work of mine. And I will be wanting in the discharge of my duty, if I fail to express my gratitude to M. R. Ry. Rao Saheb T. K. Hanumantha Rao Avl., M.E.S., (Retired) who suggested to me the very idea of bringing out this publication.

My thanks are due to Mr. O. S. Venkatarama Aiyar, Junior Tamil Pandit of the Town High School, who was kind enough to go through the proofs and to the Proprietor of the Kamakshi Amman Press for the prompt and neat execution of the book.

KUMBAKONAM,
15th June 1925.

G. BALASUBRAHMANYAM.

# INTRODUCTION.

THOSE who have watched the progress of events in these parts during the past two decades would not have failed to notice the gradual disappearance of indigenous Banking which was almost entirely in the hands of a few individuals. The individual Banker is giving place to societies organised on the joint stock system or incorporated on the co-operative basis. The Nidhis which we see in every important centre serve the petty trader, the artizan, the clerk and the man with small earnings. Co-operative Primary Societies serve mainly the agriculturist, while Central Banks finance only Primary Societies and do not as a rule help individuals. Joint Stock Banks cater to the bigger trader and people whose requirements are larger. Appreciable as may have been the progress made by these institutions during the past few years, they have touched only the fringe and have yet to serve on a large scale. One main reason why progress has not been as rapid as one would wish is the want of proper understanding on the part of the people at large, of the purpose which these institutions function and the principles on which they are founded. There has been some propagandist work so far as the co-operative institutions are concerned, but that has been spasmodic and is neither organised nor sustained to be effective. The general impression is that a Bank is a place where there is untold money available for mere asking. The importance of keeping credit engagements is seldom realised and everywhere and every day we hear tales of ever increasing overdues; and when those who are responsible for the efficient working of these institutions have to be firm with their clientele, they have to face an irate charge of want of sympathy. Needless

to say that the borrowers from a Bank scarcely realise that promptness and punctuality on the part of a Bank, so essential to its stability and reputation, can be secured only by the punctuality of its customer and the promptness with which he keeps his engagements with the Bank.

The ordinary customer of an up-country concern of the sort above referred to has to be educated as regards his duties and obligations to these institutions. Mr. G. Balasubrahmanya Aiyar Cash Keeper of the Union Bank Ltd., Kumbakonam has attempted to perform the task in a popular way and I have read with interest portions of his brochure in Tamil on Banks. He has bestowed much time upon the work and if it serves to educate the small up-country man unfamiliar with these institutions to any extent, I have no doubt, he would feel amply repaid for all the trouble he has taken. I congratulate him on his effort and I trust that it will receive adequate recognition.

KUMBAKONAM,<br>8th June 1925. N. KRISHNASWAMI AIYANGAR.

3692



# பாங்குகள்.

நமது நாட்டில் நடைபெறும் வியாபாரங்களுக்கு உதவியாகவும், ரொக்க ரூபாய் வைத்திருக்கும் முதலாளிகளுக்குத் தங்கள் பணத்தைச் சிறிது வட்டியுடனும், சாவதானமாகவும், சேமித்து வைத்தற்குத் துணைசெய்யக் கூடியதாகவுமுள்ள ஸ்தாபனங்கள் அநேக விடங்களில் இருக்கின்றனவென்பது பெரும்பான்மையோருக்குத் தெரிந்தவிஷயம். பாங்க் (Bank) என்ற ஆங்கில பதம் மேற்கூறிய ஸ்தாபனங்களுக்குப் பெயராக வழங்கி வருகிறதென்பதையும் அநேகர் அறிந்துளர். ஆனால் பாங்க் என்றால் என்ன? பாங்க் எம்மாதிரியான விதிகளை அனுசரித்து நடவடிக்கை செய்துகொண்டு வருகிறது? பொதுஜனங்களுக்கும் மற்றுமுள்ள வியாபாரிகளுக்கும் பாங்க் எவ்விதம் உபயோகமாகவிருக்கிறது? என்ற விஷயங்கள் விவரமாக எல்லோருக்கும் சரியாகத் தெரியவில்லை. அவைகளை நன்குதெரியப் படுத்தும் பொருட்டே இக்கட்டுரையை எழுதலானோம்.

பாங்கு:—பிறருடைய பணங்களைக் குறைந்த வட்டிக்கு வாங்கிச்சற்று உயர்ந்தவட்டிக்குவியாபாரிகளுக்கும்,மற்றுமுள்ள பொதுஜனங்களுக்கும் கடனாகக் கொடுத்து உதவிபுரியும் ஸ்தாபனங்களுக்கு "பாங்க்" என்று பெயர். ஆனால், அம்மாதிரி

பிறருடைய பணங்களை வாங்கிக் கடனைக் கொடுக்கும் ஸ்தாபனங்கள் அநேகம் உண்டு. அவை யெல்லாவற்றையும் "பாங்க்" என்று சொல்லக்கூடாது. எந்த ஸ்தாபனத்தில் நடைமுதல் கணக்குகள் (Current Accounts) ஜனங்கள்பெயரால் திறக்கப்பட்டு அவர்கள் இஷ்டப்பட்டபோதெல்லாம் பாங்கில் தங்களுடைய நடைமுதல் கணக்குகளில் செலுத்தியபணங்களை "செக்" (Cheque) மூலமாய் வாங்கிக்கொள்ளும்படி ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறதோ அத்தகைய ஸ்தாபனங்கள்தான் "பாங்க்" என்று சொல்லப்படும். நடைமுதல் கணக்குகளைப் பற்றியும், செக்குகளைப்பற்றியும் பிறகு விரிவாய்எடுத்துக் கூறுவோம்.

பாங்கின் ஆரம்பம்:—ஒவ்வொரு ஸ்தாபனத்திற்கும் வேலை செய்வதற்கு ஆதாரமாக முதல் பணம் அவசியமானது. ஒருவர் ஏகதேசத்தில் ஒரு வியாபாரம் செய்தாலும், பலர்சேர்ந்து ஒரு ஸ்தாபனம் அல்லது சங்கம்ஏற்பாடு செய்து வியாபாரஞ்செய்ய ஆரம்பித்தாலும், முதற் பணம் அத்தியாவசியமானது. ஏராளமானமுதல்இருக்கப்பட்ட ஒருவரே தம்முதலைக்கொண்டு பாங்கின் முறைகளை அனுசரித்து ஒரு பாங்க் நடத்தலாம். அநேகர் ஒன்றுசேர்ந்து ஒவ்வொருவரும் அவரவர்களுடைய சக்திக்குத் தக்கவாறு பணம் செலுத்தி அப்படிச் சேர்ந்த பணத்தைப் பொது முதலாகக்கொண்டு பாங்க் நடத்தலாம். இப்போது சொல்லப்படும் ஸ்தாபனங்கள் அநேகர் ஒன்றுகூடிப் பொது முதல்வைத்து நடத்திவரும் பாங்குகளைப்பற்றியே. அத்தகைய பாங்குகள் துரைத்தனத்தாரால் அங்கீகரிக்கப்பட்டனவாகவே இருக்கும். அம்மாதிரியான துரைத்தனத்தாரால் அங்கீகரிக்கப்பட்ட பாங்குகளின் நடவடிக்கைகளைப்பற்றியும், அவைகளால் நமது நாட்டின் வியாபாரங்களுக்குண்டான நன்மைகளைப்பற்றியும் இங்குச்சொல்லப்படும். புதிதாய் ஒருபாங்க் ஸ்தாபனம்

செய்வதற்குச், சிலர் ஒன்றுசேர்ந்து தாம் ஸ்தாபனம் செய்யும் பாங்குக்கு இவ்வளவு ரூபாய் அடங்கிய இத்தனை பங்குகள்' என்று வரையறுத்துக் கொள்கின்றனர். அப்பால் பாங்கில் சேர்த்துக் கொண்டு அதற்குண்டான உடன்படிக்கையில் கையொப்பமிட்டுத் தங்களது பாங்குக்குப் பொருத்தமான கருத்துகளையும், விதிகளையும் (Memorandum & Articles of Association) ரெஜிஸ்டர் செய்வதற்குக் கம்பெனி ரெஜிஸ்டிரார் (Registrar of Joint Stock Companies) அவர்களிடம் தாக்கல் செய்ய, அவை ரெஜிஸ்டர் செய்யப்படுகின்றன. அப்படி ரிஜிஸ்டர் செய்தவுடன் அதன் விவரங்களை யெல்லாம் ஜனங்களுக்குப் பகிரங்கமாய்த் தெரிவித்துப் பங்குகள் எல்லோராலும் எடுத்துக்கொள்ளப்படும். பாங்கின் விதியிலேயே இவ்வளவு பங்குகள் சேர்ந்தவுடன் பாங்கின் நடவடிக்கைகளை நடத்த ஆரம்பிக்கலாமென்றுநிர்ணயிக்கப்பட்டிருக்கும். அதன்படி போதுமான பங்குகள் சேர்ந்தவுடன் பாங்கு வேலை செய்ய ஆரம்பிக்கப்படும். இதுதான் பாங்கு ஸ்தாபனம் செய்து வேலை ஆரம்பிக்கும் முறை.

டிபாசிட்டுகள்:—பாங்கில் ஏற்படுத்தப்பட்ட பங்குத் தொகை மாத்திரம் பாங்கு நடத்தப்போதாதாகையால் குறைந்த வட்டிக்கு முதலாளிகளிடமும், சாமான்யமான ஜனங்களிடமும் பணம் வாங்கிக்கொள்ளுவார்கள். அப்படிப் பாங்கில் போடும் தொகைகளுக்குத்தான் டிபாசிட்டுகள் என்று பெயர். அத்தகைய டிபாசிட்டுகள் பலவகைப்படும். அவைகளாவன:— (1) நிர்ணயத்தவணை டிபாசிட்டுகள் (Fixed Deposits); (2) சீஸன் டிபாசிட்டுகள் (Season Deposits); (3)சேவிங்ஸ் பாங்கு டிபாசிட்டுகள் (Savings Bank Deposits); (4)நடைமுதல் டிபாசிட்டுகள் (Current Deposits).

நிர்ணயத்தவணை டிபாசிட்டுகள் :—(Fixed deposits) இவ்வித டிபாசிட்டுகள் மொத்தத்தொகைகளாக ஒருவருஷத்திற்கோ அல்லது இரண்டுவருஷம்முதல்பலவருஷங்களுக்கோ குறித்த நிர்ணய காலம் வரையில் பாங்கிலேயே தங்கியிருப்பன. மற்ற டிபாசிட்டுகளைவிட இவ்வகை டிபாசிட்டுகளுக்கு அதிக வட்டியைப் பாங்கர்கள் கொடுப்பார்கள். ஏனெனில் இம்மாதிரி போடப்படும் தொகைகள் நிர்ணயித்த காலம்வரை பாங்கிலேயே இருக்கிறபடியாலும், அதைத் திருப்பிக் கொடுக்கும் காலம் இன்னதென்று பாங்கர்களுக்குத் தெரிகிறபடியாலும், அவைகளுக்குப் பாங்கர்கள் தாங்கள் கொடுக்கும் வட்டியைவிட அதிக வட்டிக்கு வெளியில்கொடுத்து அப்படி அதிகமாய்வரும் வட்டியைத் தமக்கு லாபமாய் அடைய ஹேது இருக்கிறபடியாலும், மற்ற டிபாசிட்டுகளைவிட இந்த டிபாசிட்டுகளுக்கு அதிகவட்டியைப்பாங்கர்கள்கொடுப்பார்கள். பெருத்தமுதலாளிகள் தங்கள் பணங்களை இம்மாதிரி கணக்கில் போட்டு ஆறு மாதத்திற்கொருமுறையோ அல்லது ஒரு வருஷத்திற்கு ஒரு முறையோ, பாங்கில் ஏற்பட்ட விதிப்படி வட்டியை வாங்கிக்கொண்டு தங்கள் செலவுக்கு வைத்துக்கொள்ளுவார்கள். பாங்கில் இல்லாமல் சில்லறைப் பெயர்வழிகளிடத்தில் வெண்ணிலைக் கடனுகவோ அல்லது பெந்தகக் கடனுகவோ ஒரு முதலாளி கடன் கொடுக்கும் பக்ஷத்தில் வருஷாந்தர வட்டி ஒழுங்காய் வராது. முதல் தொகை இன்னகாலத்தில் திரும்பி வருமென்ற நிர்ணயம் இராமல் கஷ்டப்படும்படியாக இருக்கும். சில இடங்களில் முதலுக்கே மோசம் வரவும் நேரிடும். பாங்கிகளில் போடும் டிபாசிட்டுகளைப்பற்றிப் போட்டவர்களுக்கு ஒருவிதக் கவலையுமில்லை. வட்டியும் சரியான காலங்களில் தவறாது வந்துவிடும். வட்டியைக்கொண்டு ஜீவனம் செய்யலாமென்று இருப்பவர்களுக்குக் குறிப்பிட்ட காலங்களில் வட்டி

வராமல் போகுமோ என்றபயம் ஒருபோதும் இராது. பெருத்த முதலாளிகளுக்குத் தங்கள் முதலைக்கவலையன்னியில் சுமாரான வட்டிக்குப்போட பாங்க் மேற்கூறியபடி ஒத்தாசையாயிருக்கிறது.

சீசன் டிபாசிட்டுகள் :—(Season Deposits) ஒவ்வொரு வருஷத்திலும் வியாபாரிகளுக்கும் மற்றுமுள்ள பொதுஜனங்களுக்கும் சில மாதங்களில் அதிகச் செலவு ஏற்படும். வியாபாரிகளுக்கு, அவரவர்கள் எந்தெந்த வியாபாரம் செய்கிறார்களோ அது சம்பந்தப்பட்ட சரக்குகளை மலிவான விலைக்கு மொத்தமாக சில குறிப்பிட்ட மாதங்களில்தான் வாங்கும்படி வரும். நெல் வியாபாரிக்கு மகசூல் அறுப்பான உடன் தான் தன் வியாபாரத்துக்கு வேண்டிய நெல்லை மொத்தமாக வாங்கிக் கொள்ளவேண்டும். பொதுஜனங்களுக்குக் கிஸ்தி காலத்திலும் கலியாண காலத்திலும் செலவு அதிகமாக ஏற்படும். வியாபாரம் செய்யப்படுகிற ஒவ்வொரு சரக்கும் கிராக்கி ஏற்பட்ட நாட்களில் அதிக விலையாகவும் கிராக்கியற்ற நாட்களில் குறைந்த விலையாகவும் விற்கும் என்ற விஷயம் எல்லோரும் அறிவார்கள். ஏனெனில் "காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்" என்றவாறு சரக்குகளுக்கு அதிக கிராக்கி ஏற்படும் நாட்களில் அவற்றின் விலையை உயர்த்தினால்தான் வியாபாரிக்கு மிகுதியான லாபம் கிடைக்கும். அதே மாதிரி பாங்கர்களும் பணத்திற்கு அதிக கிராக்கி இருக்கும் சமயத்தில் தாங்கள் கொடுக்கும் கடன் தொகைகளுக்கு வட்டியை உயர்த்திவிடுவார்கள். எப்படி வியாபாரிகள் தாங்கள் வியாபாரம் செய்யும் சரக்குகளுக்கு கிராக்கி வரும் சமயத்தில் அதிக லாபம் சம்பாதிப்பதை உத்தேசித்து அதிகச் சரக்கு வாங்கிச் சேகரித்துக்கொள்வார்களோ, அதே மாதிரி பாங்கர்களும் பணத்திற்கு கிராக்கி வருங்காலங்களில் சாதாரண நாட்களில் கொடுப்பதைவிட குறைந்த காலத்

தவணைக்கு அதிக வட்டி கொடுப்பதாக ஒப்புக்கொண்டு டிபாசிட்டுகள் வாங்குவார்கள். சொல்ப வட்டி போதுமெனத் திருப்தியடைந்திருக்கும் பெருத்த முதலாளிகள் இந்த சமயத்தில் அதிக வட்டி கொடுப்பதாகச் சொல்லும் பாங்கர்களிடம் தங்களுடைய முதல்களை பாங்கில் அப்போது ஏற்பட்ட பிரகாரம் குறுகிய காலத் தவணைகளுக்குக் கொடுத்து சொல்ப அதிக வட்டியை அடைவார்கள். பாங்கர்களும் பணம் கிராக்கியாகவிருக்கும் சமயத்தில் தாங்கள் கொடுக்கும் கடன்களுக்கு வட்டியை அதிகப்படுத்தி அப்போது அதிக லாபத்தை சம்பாதிப்பார்கள். இந்த மாதிரி டிபாசிட்டுகள் சில குறிப்பிட்ட கிராக்கி காலங்களில் குறுகிய காலத் தவணைக்கு பாங்கர்கள் வாங்குவதினால் இவைகளுக்கு சீசன் (Season) டிபாசிட்டுகள் என்று பெயர்.

சேவிங்ஸ் பாங்க் டிபாசிட்டுகள்:— (Savings Bank Deposits). போஸ்டாபீஸ்களில் சேவிங்ஸ் பாங்க் டிபாசிட்டுகள் ஜனங்களிடம் வாங்கிக்கொண்டிருப்பது அனேகமாய் எல்லோருக்கும் தெரிந்த விஷயம். அம்மாதிரியான டிபாசிட்டுகள் பாங்குகளிலும் வாங்குவார்கள். இம்மாதிரி டிபாசிட்டுகள் தான் சொல்ப வரும்படியுள்ளவர்களுக்கு வருங் காலத்தில் ஒரு முதலைச் சேர்ப்பதற்கு அனுகுணமாக விருக்கிறது. ஒரு ரூபாய் முதற்கொண்டு தங்களாலியன்றமட்டும் அப்போதைக்கப்போது தனது சொல்ப வரும்படியிலிருந்து எவ்வளவு செலுத்தக்கூடுமோ அவ்வளவு இந்த சேவிங்ஸ் பாங்கு டிபாசிட்டில் கட்டலாம். "பலதுளி பெருவெள்ளம்" என்றபடி சிறுகச்சிறுகச் செலுத்தி ஒரு முதல் சேர்ப்பதற்கு இவ்வித டிபாசிட்டுகள் ஏழை ஜனங்களுக்கு எவ்விதம உபயோகப்படுவது என்று காணலாம். இப்படிச் சிறுகச் சிறுகப் போட்ட தொகைகளை ஏதாவது செலவுக்கு மத்தியில் வாங்கிக் கொள்ளவேண்டு

மானாலும் வாங்கிக்கொள்ளலாம். பணம் ஒருபோத்சத்தொகை யாகச் சேருவதுடன் அப்பணத்திற்குச் சொற்பவட்டியையும் பாங்கர்கள் கொடுப்பார்கள். இந்தக்கணக்கில் போடப்படும் தொகைகளை ஒரு கைச்சாத்துப் புஸ்தகத்தில் பதிந்து பணம் போட்டவர்களிடம் கொடுப்பார்கள். கணக்கில் செலுத்தும் தொகைகளை அப்போதைக்கப்போது வரவு வைத்தும், வாங் கும் தொகைகளை அப்போதைக் கப்போது பற்று எழுதியும் கொடுப்பார்கள்.

சில பாங்குகளில் உண்டிப்பெட்டி செய்து பணம் போடு கிறவர்களிடம் கொடுத்து அவர்கள் சௌகரியம்போல் வீட்டி லேயே பணம் போட்டு ஒரு வாரத்திற் கொருமுறையோ அல் லது 15 நாட்களுக்கொரு முறையோ பாங்கில் கொடுக்கும் படி ஏற்பாடு செய்திருக்கிறார்கள். பணம் போடுபவர்களிடம் ஒரு கைச்சாத்துப் புஸ்தகம் கொடுப்பார்கள். பணம் சேர்ந்த வுடன் பாங்கில் ஏற்பட்ட விதிப்படி இந்தப் பெட்டியைப் பாங் கில் கொண்டுவந்து கொடுப்பார்கள். இந்தப் பெட்டியைத் திறக்க பாங்கர்களுக்கு மாத்திரம் தான் அதிகாரம் உண்டு. டிபாசிட்டரிடம் கொடுக்கும்போது பெட்டியைச் சீல்வைத்துத் தான் பாங்கர்கள்கொடுப்பார்கள் பெட்டியைப் பாங்கில்கொண்டு கொடுத்தவுடன் அவர்கள் அதைத் திறந்து சேர்ந்திருக்கும் தொகையை எடுத்துக்கொண்டு எவ்வளவு தொகை இருந்த தோ அத்தொகையை டிபாசிட்டர் கணக்கில் வரவு வைத்துக் கொண்டு அவருக்குக் கொடுத்திருக்கும் கைச்சாத்துப் புஸ்த கத்திலும் வரவு வைத்துக்கொடுப்பார்கள். உண்டிப்பெட்டி யையும் சீல்வைத்து டிபாசிட்டரிடம் மீண்டும் கொடுத்து விடு வார்கள். இம்மாதிரியான டிபாசிட்டுகள் சொற்பவரும்படியுள்ள வர்களுக்கும் கூலிவேலை செய்பவர்களுக்கும் ஒரு முதல் சேர்ப் பதற்கு மேற்கூறியவாறு அனுகூலமாயிருக்கின்றது. சேவிங்ஸ்

பாங்க் டிபாசிட்டுகள் மாதிரியே மேற்கூறிய உண்டிப் பெட்டி டிபாசிட்டு கணக்குகளும் இருக்கிறபடியால் அதோடுகூட இவ் வித டிபாசிட்டு கணக்குகளைப்பற்றிச் சொல்லலாயிற்று.

நடைமுதல் கணக்குகள் :—(Current deposits) முத லாளிகளிடத்திலும், வியாபாரிகளிடத்திலும் அவர்கள் சௌகரி யத்தின்படி அடிக்கடி பணம் போட்டுக்கொள்ளவும், அவர் களுக்கு வேண்டியபோது செக் மூலமாய்ப் பணம் வாங்கிக் கொள்ளவும் உதவியாக இருக்கும் நடைமுதல் கணக்குகளை வைத்துக்கொண்டிருக்கும் ஸ்தாபனங்கள்தான் பாங்கு என்று சொல்லப்படும் என்று முன்னமேயே சொல்லியிருக்கிறோம். இம்மாதிரியுள்ள நடைமுதல் கணக்குமுறைதான் பெருத்த முதலாளிகளுக்கும், வியாபாரிகளுக்கும் பலவழிகளிலும் சௌ கரியமாகவிருக்கிறது. இதைப் பற்றுவரவு கணக்கு என்றும் கூறுவார்கள். இந்தக் கணக்கில் ஒருவர் எவ்வளவு தொகையா யினும் பலதடவையாகவோ அல்லது ஒரேதடவையாகவோ மொத்தமாகவோ அல்லது சில்லறையாகவோ எப்போது தான் திருப்பி வாங்கிக்கொள்வது என்ற நிபந்தனை இல்லாமல் போட லாம். இந்த கணக்குக்கு மிகவும் குறைவான வட்டியைத்தான் பாங்கர்கள் கொடுப்பார்கள். சில பாங்கர்கள் இம்மாதிரிக் கணக்குகளுக்குவட்டியேகொடுக்கமாட்டார்கள். நவீனநாகரிகம் அதிகரித்த இங்கிலாந்து, அமெரிக்கா முதலிய நாடுகளிலுள்ள சில பாங்கர்கள் இம்மாதிரியான கணக்குகளுக்கு வட்டி ஒன்றும் கொடாமலிருப்பதுந்தவிர இந்தக் கணக்குகள் ஜனங்களுக்காகத் தாங்கள் வைத்துக்கொண்டு அதற்காகதாங்களெடுத்துக்கொண்டு வரும் சிரமத்திற்காக சொல்பதாகும் (Commission) வாங்கு கிறார்கள். அப்படித் தாகு கொடுத்தபோதிலும் பாங்கியில் நடை முதல் கணக்குகள் வைத்துக்கொள்வதில் முதலாளிகளுக்கும் வியாபாரிகளுக்கும் அநேக விதத்தில் சௌகரியமிருக்கின்றது.

# செக்குகள்.
# (Cheques.)

நடைமுறைதல் கணக்குகளில் போட்ட தொகைகளை எந்த நிமிஷத்திலும் தேவையானாலும் வாங்கிக்கொள்ளலாம் என்று சொன்னோம். அப்படி வாங்கிக்கொள்ளுவதானால் செக் மூலமாகத்தான் வாங்கிக்கொள்ளலாம் என்றும் சொன்னோம். இனி, செக் என்றால் என்ன என்றும், அவைகள் எவ்வகைப்படும் என்றும் இங்குக் கூறுவோம். சாதாரணமாக நாம் பிறருக்குக் கொடுக்கும் தொகைகளுக்கு ரசீதுகள் வாங்கிக்கொள்ளுகிறோமல்லவா? துரைத்தனத்தார் விதித்திருக்கும் சட்டப்படி ரூ. 20க்கு மேற்பட்ட தொகைகளுக்கு ஒரு அணா ரசீதுலேபிள் ஒட்டிக் கையெழுத்து செய்யவேண்டுமென்பதும் அநேகருக்குத் தெரிந்தவிஷயமல்லவா? அம்மாதிரியான ரசீதுகளுக்குப் பதிலாகத்தான் செக்குகள் கொடுக்கப்படுகின்றன. ஒரு டிபாசிட்டர் தன்னுடைய நடைமுறைதல் கணக்கிலிருந்து தொகை வாங்கவேண்டுமானால் பாங்கர்களால் தனக்குக் கொடுக்கப்படும் செக்குகளில்தான் தனக்கு வேண்டிய தொகைகளை எழுதிக் கையொப்பம் செய்துகொடுத்து வாங்கவேண்டும். செக்குகள் இம்மாதிரித்தான் இருக்கவேண்டுமென்றும், அவை இன்னின்ன வகைப்படுமென்றும் துரைத்தனத்தாராலேயே சட்டம் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு செக் பாரத்திலும் ஒரு அணா ஸ்டாம்பு பதித்திருக்கும். இந்த ஸ்டாம்புக்கிரயம் மட்டிலும் தான் பாங்கர்கள் டிபாசிட்டர்களிடமிருந்து வாங்கிக் கொள்ளுவார்கள். மற்றபடி டிபாசிட்டர்களுடைய உபயோகத்திற்காகக்கொடுக்கும் செக் புத்தகங்களுக்குக் கிரயம் வாங்குகிறதில்லை. செக் என்பது பாங்கர்களுக்கு டிபாசிட்டர் "இன்னாருக்காவது அல்லது இந்தச் செக்கைக் கொண்டுவந்து கொடுக்கிறவர்களுக்காவது அல்லது இன்னாருக்காவது அல்லது அவர் உத்த

ரவுபெற்றவர்களுக்காவது இத்தனை ரூபாய்கேட்டவுடன் கொடு” என்றெழுத்துமூலமாய் செய்யும் உத்தரவு. இந்தப்பிரகாரம் பாங்குக்கு அனுப்பப்படும் செக்குகளுக்கு அப்போதைக்கப்போது பாங்கர்கள் செக்கில்கண்ட தொகையைச் செக்கைக் கொண்டுவந்தவர்வசம் கொடுக்கக்கடமைப்பட்டவர்கள். ஆனால் செக் சம்பந்தமாயேற்பட்டிருக்கும் விதிகளை அனுசரித்துச் செக் எழுதப்பட்டிருக்கிறதாவென்றும், செக் எழுதிக்கொடுத்திருப்பவர் கணக்கில் போதுமான தொகை இருக்கிறதாவென்றும் பார்த்துக்கொண்டுதான் செக்கில்கண்ட தொகையைக் கொடுப்பார்கள்.

செக்குத் தொகையை “இன்னாருக்காவது அல்லது ஷை செக்கைக் கொண்டு வந்தவருக்காவது கொடு” என்று எழுதப்பட்டிருக்கும் செக்குகள் ‘பேரர்’ (bearer) செக் என்று சொல்லப்படும். “இன்னாருக்காவது அல்லது அவருடைய உத்தரவு பெற்றவருக்காவது இன்ன தொகையைக் கொடு” என்று எழுதப்பட்ட செக்குகள் ‘ஆர்டர்’ (order) செக் என்று சொல்லப்படும்.

‘பேரர்’ செக்குகளுக்கு ஷை செக்கின் தொகை யாருக்குக் கொடுக்கவேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறதோ அவருடைய கையெழுத்தில்லாமலே பாங்கர்கள் செக்குத் தொகையைக் கொடுத்துவிடலாம். ஆனால் ‘ஆர்டர்’ செக்குகளுக்கு யாருக்குப் பணம் கொடுக்கும்படி செக்கில் சொல்லியிருக்கிறதோ அவருடைய கையொப்பம் அவசியம் வேண்டும். ‘பேரர்’ செக்காயினும் ‘ஆர்டர்’ செக்காயினும் யார்செக்கைக்கொண்டு வந்து பாங்கரிடம் தொகையை வாங்குவதற்குக் கொடுக்கிறார்களோ அவருடைய கையெழுத்தைப் பாங்கர் வாங்கிக்கொண்டுதான் தொகையைக் கொடுப்பார்கள். செக்கின்படி பணத்தை வாங்குபவரோ, அல்லது யார் பேரால் செக்கு எழுதப்பட்டி

ருக்கிறதோ (அதாவது யாருக்குக் கொடு என்று செக்கில் எழுதியிருக்கிறதோ) அவர்கள் கையெழுத்து செய்திருக்கிறதா னது செக்குக்குப் பின்புறத்தில்தான் அமைதல்வேண்டும். செக் குக்குப் பின்புறத்தில் கையெழுத்துச் செய்வது 'எண்டார்ச மெண்டு' (endorsement) என்று சொல்லப்படும். இந்த எண் டார்சமெண்டென்பது இருவகைப்படும். பின்புறத்தில்கையொப் பம்மாத்திரம் செய்துவிட்டால் 'பிளாங்க்' (Blank) எண்டார்ச மெண்டு என்று சொல்வார்கள். செக்கின் பின்புறத்தில் "இந் செக்கில் கண்ட தொகையை இன்னாருக்காவது அல்லது அவர் உத்தரவுக்காவது கொடு" என்று எழுதியிருந்தால் அது 'ஸ்பெ ஷல் (Special) எண்டார்சமெண்டு' என்று சொல்லப்படும்.

பாங்கில் நடைமுதல் கணக்கு வைத்திருப்பவர் யாருக்கா வது பணம் கொடுக்க வேண்டுமானால் அவருக்குக் கொடுக்க வேண்டிய தொகைக்குச் செக் ஒன்று எழுதிக் கொடுத்துவிட லாம். அப்படி வாங்கிய செக்கை எண்டார்சமெண்டு செய்து அவர் பிறருக்குக் கொடுக்கவேண்டிய தொகைக்காகக் கொடுத் துவிடலாம். இம்மாதிரியான செக்குகள் பல கைகள் மாறிக் கடைசியாகப் பணம் பெறுவதற்குப் பாங்கில் கொண்டு கொடுக் கப்படும். கொடுத்த பணத்திற்கு இந்தச் செக் ஓர் ஆதாரமாக மேற்கூறியவாறு இருக்கிறது. பாங்கில் செக்கில் கண்ட தொகையைவிட அந்தக் கணக்கில் குறைந்த பணம் இருந்தா லொழிய செக்குத் தொகை கொடுபடாமல் இராது. செக் கொண்டுபோய்க் கொடுப்பவர் எவ்வளவு தொகை செக்கில் காணப்பட்டிருக்கிறதோ அதற்குக் குறைந்த தொகை போது மென்றாலும் அந்தத்தொகை கொடுபடமாட்டாது. கணக்கில் குறைந்த தொகை இருந்து செக்கின் தொகை அதிகப்பட்டால் அந்தச் செக்கைப் பாங்கர்கள் திருப்பி யனுப்பி விடுவார்கள்.

பாங்கர்கள் செக்குக்குப் பணம் கொடுக்காமல் திருப்பி யனுப்பும்போது, 'எழுதினவரைக் கேட்டுக்கொள்ளவும்' (Refer to drawer) என்று எழுதித் திருப்பிக் கொடுப்பார்கள். அப்படித் திருப்பிக்கொடுத்தால், 'செக் எழுதிக்கொடுத்தவர்கள் கணக்கில் போதுமான தொகை இல்லைபோலும்' என்று ஊகித்துக்கொண்டு செக் கொண்டுவந்தவர் திரும்பிப் போய்விட வேண்டியதுதான். ஆனால் கணக்கில் இருக்கும் தொகையைவிட அதிகமான தொகைக்குச் செக் எழுதிப் பாங்கர்களால் அந்தச் செக் திருப்பப்பட்டுவிட்டால் டிபாசிட்டரின் நாணயம் கெட்டுப்போய்விடும். அப்படித் தேர்ந்தால் டிபாசிட்டர்கள் நாணயமற்றவர்களாகப் போய்விடுவார்கள். அவர்களின் செக் திருப்பி வந்தவிஷயம் பிறருக்குத் தெரிந்தால் அவருக்குள்ள மதிப்பு கெட்டுப்போய்விடும். அதனால் பலவிதமான நிர்ப்பந்தங்கள் ஏற்படும். ஆகையால் செக் எழுதிப் பிறரிடம் கொடுக்கும்போது, தான் எழுதும் தொகைக்குமேற்பட்ட தொகை பாங்கில் இருக்கிறதாவென்று பார்த்துக்கொண்டுதான் செக் எழுதவேண்டும். செக் எழுதிக்கொடுத்த தேதியிலிருந்து மூன்று மாதத்திற்குள் செக்கைப் பாங்கில்கொடுத்துப் பணம் வாங்கிக்கொள்ளலாம். ஆனால் எவ்வளவு சீக்கிரமாகச் செக் மாற்றப்படுகிறதோ அவ்வளவுக்கவ்வளவு நல்லது. அனாவசியமாகக் காலதாமதம் செய்தால் செக்கானது பல காரணங்களினால் மாற்றப்படாமல் போய்விட ஏது உண்டு. செக் எழுதிக்கொடுத்தவருக்கு ஏதாவது நஷ்டம்வந்து பாங்கில் அவருடைய கணக்கிலிருக்கும் தொகையைக் கடன்காரர்கள் ஜப்திசெய்து வாங்கிக்கொண்டுவிட்டால், முன்னாடியே எழுதிக்கொடுத்திருந்தபோதிலும் காலதாமதமாகக் கொண்டுவந்து கொடுக்கப்பட்ட செக்குகளுக்குப் பணம் கொடுக்கமுடியாமல் போய்விடும். அதற்கு எழுதிக்கொடுத்தவராவது பாங்கராவது ஜவாப்தாரியாகமாட்டார்கள்.

தவிர, பாங்கில் நடைமுதல்கணக்குள்ள இருவர்கள் ஒருவருக்கொருவர் பணம் கொடுக்கவேண்டியிருந்தால், கொடுக்க வேண்டிய தொகைக்கு ஒரு செக் எழுதி அந்தச் செக்கின் குறுக்கே இரண்டு சமஅகலமுள்ள கோடுகளைக்கிழித்து "இன்னாருடைய கணக்கில் வரவு வைத்துக்கொள்ளவும்" என்று எண்டார்சுமென்டுசெய்து பாங்கர்களுக்கு அனுப்பிவிட்டால் பாங்கர்கள் அம்மாதிரி வரவு வைத்துக்கொண்டுவிட்டு அதுசம்பந்தப்பட்ட டிபாசிட்டருக்கும் தெரிவித்து விடுவார்கள். இம்மாதிரி குறுக்குக் கோடுகள் போட்டனுப்பிய செக்குக்கு 'கிராஸ்டு செக்கு' (Crossed Cheque) என்பதுபெயர். கிராஸ்டு செக்குகளுக்குப் பாங்கர்கள் பணம் கொடுக்கமாட்டார்கள். கணக்குகளில் வரவுவைத்துக்கொள்ளத்தான் அதிகாரமுண்டு. கிராஸ்டு செக்கானது கெட்டுப்போய்விட்டாலும் அதைக்கொண்டு அயல் மனிதர்கள் ஒருவரும் பாங்கியில் பணம் வாங்கிவிடமுடியாது. பாங்கர்கள் மூலமாகவோ அல்லது பாங்கில் நடைமுதல் கணக்கு வைத்திருப்பவர் மூலமாகவோதான் கிராஸ்டு செக்குகள் மாற்றக் கூடும். ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குப் பணம் அனுப்பவேண்டுமானால் அப்படிப் பணம் அனுப்பவேண்டியவர் பெயருக்கு ஒரு செக் எழுதி அதைக் கிராஸ்செய்து சாதாரண தபாலிலும் அனுப்பிவிடலாம். மேற்கூறியவாறு செக் கெட்டுப்போய்விட்டாலும், திருட்டுத்தனமாய்ச் செக்கை மாற்றித் தொகையை எடுத்துக்கொள்ள முடியாது. இதனால் நோட்வாங்கி அதை இன்ஷியூர் செய்து அனுப்பவேண்டிய தொந்தரவும் நீங்கும். ஒருவர் பிறருக்குக் கொடுக்கவேண்டிய தொகைகளுக்குச் செக்குகள் எழுதிக்கொடுப்பதானது எவ்வளவு சௌகரியமாய் இருக்கிறதென்பதை மேற்கூறியவற்றால் அறியலாம்.

நடைமுதல் கணக்கு சம்பந்தமாய்ச் செக்குகள் எழுதப் படுவதிலுள்ள சௌகரியங்கள் இன்னின்னவென்று மேலே

சொன்னோம். மற்றப்படி நடைமுதல் கணக்கு வைத்திருப்ப வர்களுக்குப் பாங்கர்கள் வேறு என்ன சௌகரியங்களைச் செய் கிறார்கள் என்று இப்போது கூறுவோம். (1) வியாபாரியோ, அல்லது பெருத்த முதலாளியோ, தம்மிடம் அன்றன்று சேர்ந்த தொகைகளைக் கையில் வைத்துக்கொண்டு பந்தோபஸ் தாகப் பாதுகாத்துக்கொண்டு இராமல் அந்தத் தொகைகளை அப்போதைக்கப்போது பாங்கர்களிடம் தம்முடைய நடை முதல் கணக்கில் சேர்த்துக்கொள்வது. (2) அப்படிப் போடப் பட்டு வரவு வைத்த தொகைகளைப் பாங்கர்கள் எந்தநிமிஷத்தில் கேட்டாலும் கொடுக்கத் தயாராக இருப்பார்கள். (3) தமக் குண்டான தஸ்தாவேஜுகளைப் பாங்கர்களிடம் ஒப்புவித்துத் தமக்கு வரவேண்டிய தொகைகளை வசூலித்துக் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டால் பாங்கர்கள் வசூலித்துக் கொடுக்கிறார்கள். (4) தமக்குண்டான சகல தஸ்தாவேஜுகள் விலையுயர்ந்த சாமான்கள், ஆபரணங்கள் முதலியவைகளை ஜாக் கிரதையாய் வைத்துக்கொள்ள வேண்டுமென்று பாங்கர்களிடம் கொடுத்தால் அதேமாதிரி ஜாக்கிரதையாய் வைத்துக்கொண்டு வேண்டியபோது திருப்பிக் கொடுத்துவிடுவார்கள். (5) துரைத் தனத்தாரின் கடன் பத்திரங்கள் (Goverment promissroy notes) டிபாசிட்டரிடம் இருந்தால் அவைகளைப் பாங்கியில் கொடுத்துவைத்திருக்கலாம். பாங்கர்கள் அப்பத்திரங்களைத் தங் களிடம் ஜாக்கிரதையாய் வைத்திருப்பதோடுகூட அவைகளின் வட்டித்தொகையைக் கெடுத்தேதியில் தவறாமல் வசூல்செய்து டிபாசிட்டரின் கணக்கில் வரவு வைத்துக்கொள்வதுடன், அவ் விஷயத்தைஅப்போதைக்கப்போது டிபாசிட்டருக்குத்தெரிவித் துக்கொண்டும் இருப்பார்கள். (6) கொடுக்கவேண்டிய தொகை களுக்குச் செக் கொடுப்பதானது கொடுத்த பணத்திற்கு ரசீதாக வும் ஆகின்றது. (7) டிபாசிட்டருக்கு வரவேண்டிய தொகை

களைப் பாங்கர்களிடம் சொல்லி வசூல்செய்யச்சொன்னால் அவர்கள் ஒரு பைசாக்கூடக் குறையாமல் முழுத்தொகையையும் வாங்கிவிடுவார்கள். அப்படிக்கில்லாமல் டிபாசிட்டரே தமது பணத்தை வாங்குவதானால் தாமதிப்பதற்கிடப்பட்டு ஏதாவது சொல்பத் தொகையேனும் தள்ளிக்கொடுக்கும்படி நேரிடும். இவ்வித அசௌகரியங்களுக்குப் பாங்கர்கள் இடம் கொடுக்கமாட்டார்கள்.*

நடைமுதல் கணக்கு வைத்திருப்பதால் டிபாசிட்டருக்கு உள்ள சௌகரியங்களை மேலே எடுத்துச் சொன்னோம். 'டிபாசிட்டருக்குப் பாங்கர்கள் இவ்வளவு வேலைசெய்வது எதற்காக? இம்மாதிரியாக டிபாசிட்டுகளினால் பாங்குக்கு என்ன விதமான லாபமிருக்கிறது?' என்று சுபாவமாய்க்கேள்விபிறக்கும். பாங்கர்கள் நடைமுதல் கணக்கு வைத்துக்கொள்ளச் சில விதிகளை ஏற்படுத்தி இருப்பார்கள். அதாவது ஒவ்வொரு நடைமுதல் கணக்கிலும் டிபாசிட்டருடைய பணம் இத்தனை ரூபாய்க்குக் குறையாமல் இருக்கவேண்டுமென்று நிபந்தனையை ஏற்படுத்தி இருப்பார்கள். உதாரணமாக ஒருபாங்கில் 200 பேர் நடைமுதல் கணக்கு வைத்துக்கொண்டிருந்து பாங்கின் விதிப்படி ஒவ்வொரு நடைமுதல் கணக்கிலும் ரூபாய் நூறுக்குக் குறையாமல் இருக்கவேண்டும் என்று இருந்தால், பாங்கர்களுக்கு ரூ 20,000 மிக்கக்குறைவான வட்டிக்கு நீடித்தகாலமிருக்கும். பாங்கர்கள் நடைமுதல் கணக்குகளிலுள்ள பணத்திற்கு மிகுந்த குறைவான வட்டிதான் கொடுப்பார்களாகையால் இந்த 20,000 ரூபாவைக்கொண்டு பிறருக்கு அதிகவட்டிக்குக்கடன்கொடுத்து அதனால் மிகுந்த லாபத்தையடைவார்கள். தவிர, நடைமுதல் கணக்கிலுள்ளதொகைகளை முன் எச்சரிக்கைகொடுக்காமல் எந்த சமயத்திலும் வாங்கலாமென்றாலும், நடைமுதல் கணக்குகளுள்ள எல்லோரும் ஏககாலத்தில் ஜாடாத்தொகையையும் வாங்

கும்படி ஒருபோதும் நேராது. ஆகையால் பாங்கர்கள் நடைமுதலிலுள்ள மொத்தத்தொகையில் ஒருபாகம் மாத்திரம் தினப்படி நடக்கும் வரவுசெலவுகளுக்குக் கையிருப்பாய் வைத்துக் கொண்டிருத்தல்போதுமானது. மிகவும் சொல்பவட்டிக்கு வாங்கின நடைமுதல் கணக்கிலிருக்கும் பெரும்பான்மையோருடைய பணத்தைப் பணம்வேண்டியவர்களுக்கு அதிகவட்டிக்குக் கடன் கொடுத்தல் பாங்கருக்கு எவ்வளவு லாபகரமாகவிருக்கும் என்பது மேற்சொன்னதனுற் புலப்படும். ஆகையால் பாங்கர்களுக்கும், பாங்கில் சம்பந்தம் வைத்திருக்கும் வியாபாரிகளுக்கும், முதலாளிகளுக்கும் நடைமுதல் கணக்கானது மிகவும் அத்தியாவசியமானது. இதைத்தவிர நடைமுதல் கணக்கின் வரவு செலவுகளிலிருந்து ஒரு வியாபாரியின் யோக்யதையையும் அறிந்துகொள்ளலாம்.



## கடன்கள்.

## (Loans & advances.)

எப்படி டிபாசிட்டுகள் பலவகைப்பட்டனவோ அதே மாதிரி வியாபாரிகளுக்கும், மற்றுமுள்ள பொதுஜனங்களுக்கும் பாங்கர்களால் கொடுக்கப்படும் கடன்கள் பலவகைப்படும். எவ்வகைக் கடனும் சொல்பகாலத்திற்குள் திருப்பிக்கொடுக்கும்படி இருக்குமேயல்லாமல் நீண்டகாலக் கடன்கள் பாங்கர்களால் கொடுக்கப்படமாட்டாது. ஸ்தாவரசொத்தின் ஈட்டின் பேரிலும் பாங்கர்கள் ஒருவித கடனையுங் கொடுக்கமாட்டார்கள். குறுகிய காலக்கடன்களாயிருந்தால்தான் பாங்கர்கள் தங்களிடம் இருக்கும் தொகைகளைப் பல ஜனங்களுக்குக்கொடுத்து ஒத்தாசை செய்யமுடியும். பாங்கிலும் பணப்புறட்டல்(turn over) அதிகமாகவிருக்கும். தவிர, பாங்கர்கள் வாங்கும் ஜாமீனானது ஜங்கமசொத்துஜாமீன்(Liquid Security)ஆகஇருந்தால்தான் கடன்வாங்கினவர் கெடுத்தேதியில்பணத்தைச் செலுத்தத்தவறினால் அவர்களால் கொடுக்கப்பட்டிருக்கும் ஜங்கமஜாமீன்களைச் சுலபமாகவிற்றுத் தங்களுக்குவரவேண்டிய தொகைகளுக்கு உளவடைத்துக் கொள்ள இயலும். அப்படிக்கு இல்லாமல் ஸ்தாவர சொத்து ஜாமீன்களாகவிருந்தால் அவைகளைச் சுலபமாக விற்கமுடியாது. இதேகாரணம்பற்றித்தான் பாங்கர்கள் ஸ்தாவர சொத்தின்பேரில் கடன்கொடுக்கிறதில்லை. அத்தகைய ஜங்கம ஜாமீன்கள் பின்கூறியவைகளுள் அடங்கியிருக்கும்.

(1) துரைத்தனத்தார் கடன் பத்திரங்கள். (Government promissory notes.)

(2) வியாபாரிகளுக்கு அவர்கள் வியாபாரம் செய்யும் சரக்குகள் (Goods & merchandise.)

(3) நகைகள் (Jewels.)

(4) தவணை உண்டிகள் (Bills of exchange.)

(5) நபர் ஜாமீன் (Personal surety.)

ஒரே பேர்வழியின் ஜவாப்தாரியின் பேரில் மேற்கூறியபடி ஜங்கமசொத்துக்களின் ஈடில்லாமலாவது அல்லது நபர் ஜாமீனில்லாமலாவது பாங்கர்கள் கடன் கொடுக்கமாட்டார்கள். சாதாரணமாய் மேற்கூறிய ஜாமீன்களுள் தவணை உண்டிகளைத் தவிர மற்றவிதமான கடன்களைப்பற்றி அநேகமாய் எல்லோருக்கும் தெரிந்திருக்கும். தவணை உண்டிகள் விஷயமாய் இங்கு விபரமாய் எடுத்துரைப்போம்.

## உண்டிகள் வாங்குதல்.

## (Discounting bills of exchange.)

நமது நாட்டு வியாபாரிகள் ஒருவருக்கொருவர் கொடுக்க வேண்டிய பணங்களுக்கு உண்டிகள் எழுதிக்கொடுக்கிற வழக்கம் அநேகருக்குத் தெரிந்திருக்கும். ஆங்கில பதமாகிய பில் (Bill) என்பதுதான் நம்மவர்களுள் உண்டி எனக் கூறப்படுவது. நவீன நாகரிகம் வளர வளர நமது நாட்டின் வியாபார முறைமுழுவதும் முற்றிலும் மாறி ஆங்கிலதேசக் கோட்பாடுகளே நமது தேசத்திலும் அனுசரித்துவரப்படுகின்றன என்பது யாவரும் அறிந்ததே. அஃது எல்லா விஷயங்களிலும் அவ்வளவு உசிதமில்லையாயினும், வியாபார அபிவிருத்தியை உத்தேசித்து ஆங்கிலேயர்கள் செய்துகொண்டிருக்கும் முறைகளை நம்மவர்களும் அனுசரிப்பதானது நமதுநாட்டின் க்ஷேமத்திற்குத் துணையாகும். இந்த உண்டிகளை 'பில்' என்ற ஆங்கில பதத்தாலேயே கூறுவோம். பில் என்பது ஒருவர் மற்றொருவருக்கு ஒரு குறிப்பிட்ட தொகையைக் கேட்டவுடனாவது, அல்லது இவ்வ

ளவு நாள் கழித்தாவது, இன்னாருக்காவது, அல்லது இன்னார் உத்தரவு பெற்றவருக்காவது, அல்லது இன்னாருக்காவது அல்லது அந்த பில்லைக் கொண்டுவந்தவருக்காவது கொடுக்கும்படி எழுதிக்கொடுக்கும் பத்திரமேயாம்.

உண்டிகளினால் வியாபாரம் அபிவிருத்தியாகிறதென்றும் அஃது எப்படி என்றால் வியாபாரிகள், தாங்கள்விற்கும் சரக்குகளின் கிரயத்திற்கு யாரிடம் சரக்கு விற்கிறார்களோ அவர்கள் பேரில் உண்டிகளை எழுதித் தங்கள் பாங்கரிடம் கொடுத்துஉண்டியில்கண்ட தொகையை வாங்கிக்கொண்டு விடுவார்கள். பாங்கர்கள் இந்த உண்டிகளின் தொகைகளை கெடுத்தேதிகளில் வசூலித்துத் தாங்கள் எடுத்துக் கொள்வார்கள். சரக்கு வாங்கும் சில்லறை வியாபாரிகளுக்குத் தாங்கள் வாங்கும் சரக்குகளின் கிரயம் முழுவதும் உடனே கொடுத்துவிடமுடியாது. மொத்தமாகச் சரக்கு விற்கும் பெருத்த வியாபாரிகள் தங்களிடம் சரக்கு வாங்கும் சில்லறை வியாபாரிகளிடம் தங்களுடைய சரக்குகளின கிரயத்தை இன்ன கெடுவிற்குள் கொடுத்துவிட வேண்டுமென்று ஓர் ஏற்பாடு செய்துகொள்வார்கள். சில்லறை வியாபாரிகளுக்குச் சரக்குவிற்றவுடன் அந்தச் சரக்கின் கிரயத்திற்குத் தாம் செய்து கொண்ட எற்பாட்டின்படி எவ்வளவு நாள் கழித்து அந்தத் தொகை தனக்கு வரவேண்டுமோ அந்தத்தவணை போட்டு அந்தச் சில்லரை வியாபாரியின் பேரில் ஓர் உண்டி எழுதித் தன்னுடையபாங்கரிடம் கொடுத்து அந்தத் தொகையை மொத்தமாகச் சரக்கு விற்கும் வியாபாரி முன்னமேயே வாங்கிவிடுவார். பாங்கர்கள் சில நாள் கழித்து வசூலாக வேண்டிய தொகையை முன்னாடியே வியாபாரியிடம் கொடுத்துவிடவேண்டியிருப்பதால், எவ்வளவு நாள் கழித்துத் தமக்கு அந்த உண்டியின் தொகை கிடைக்குமோ அவ்வளவு நாட்களுக்குண்டான வட்டியைப் பிடித்துக் கொண்டுதான்

இந்த மொத்த வியாபாரியிடம் உண்டித் தொகையைக் கொடுப்பார்கள். இந்த உண்டியின் தொகையானது கெடுத்தேதியில் வசூலாகாத போனால் உண்டி எழுதிக்கொடுத்த மொத்த வியாபாரிதான் அந்தப் பணத்திற்கு ஜவாப்தாரியாவார். பாங்கரும், உண்டியை மேற்கூறியவாறு வாங்குவதற்குமுன் உண்டி எழுதிக் கொடுப்பவரும், உண்டிப்பணம் கொடுக்க வேண்டியவரும் தகுந்த நாணயமுள்ள பேர்வழிகளாவென்று பார்த்துக்கொண்டு தங்களுக்குத் திருப்திகரமாக விருந்தால்தான் உண்டியை வாங்கிக் கொள்ளுவார்கள். இதனுல் சரக்கு விற்கும் வியாபாரிக்குப் பணத்தட்டில்லாமல் தாம் விற்ற சரக்குகளுக்குப் பாங்கரிடமிருந்து உடனே பணம் வந்துவிடுகிறது. அந்தப்பணத்தை வாங்கி மறுபடியும் மற்ெருரு புரட்டலுக்கு உபயோகிக்கலாம். இம்மாதிரி பில்களுக்கு அவைகளின் தவணைத் தேதிக்குமுன் வட்டியைப் பிடித்துக்கொண்டு தொகைகளைக் கொடுப்பது ஆங்கிலத்தில் 'டிஸ்கவுண்டு' (Discount) செய்கிறது என்று சொல்லப்படும். இம்மாதிரி பாங்கர்கள் செய்வதானது வியாபாரிகள் விற்ற சரக்குகளுக்கு அவைகளின் கிரயத்தையே பாங்கர்கள் வசூல்செய்து கொடுப்பதாகும். நவீனநாகரிகத்தில் இம்மாதிரி வியாபாரிகளுள் ஒருவருக்கொருவர் மேற்கூறியவாறு பில்கள் எழுதிக்கொண்டு பாங்கர்களிடம் டிஸ்கவுண்ட் செய்வதானது வெகு சௌகரியமாக விருக்கின்றது. நிலுவை வசூல் செய்வதற்காக வியாபாரிகள் அதிக சிரமப்பட வேண்டியதில்லை. பாங்கர்கள் ஒரு பில்லை மேற்கூறியபடி டிஸ்கவுண்ட் செய்தவுடன் யார்பேரால் அந்த பில் எழுதப்பட்டிருக்கிறதோ அவருக்கு அந்த பில்லை அனுப்புவார்கள். அந்த பில் கையில் வந்தவுடன் அந்த வியாபாரி தமக்கும் தமது பேரால் உண்டி எழுதி இருக்கிறவருக்கும் முன்னுடியே நடந்திருக்கும் உடன்படிக்கைப் பிரகாரம் அந்த பில் எழுதப்பட்டிருக்கிறதாவென்று பார்த்து,

அப்படி சரியாக விருந்தால் அந்த பில்லின் குறுக்கே ஒப்புக் கொள்ளப்பட்டது (Accepted) என்று எழுதிக் கையொப்பம் செய்து திரும்பவும் பாங்கர்களிடம் அனுப்பிவிடுவார்கள். பில் இம்மாதிரி ஒப்புக்கொள்ளப்பட்ட பிறகு அதில்கண்ட பணம் கொடுக்க வேண்டிய கெடுத்தேதிக்கு ஒரு வாரத்திற்குமுன் பாங்கர்கள் அதை ஒப்புக்கொண்ட வியாபாரிக்குப் பில்லின் தொகை இன்ன தேதியில் கெடுவாகிறதென்றும், அதன்படி தொகையைக் கெடுத்தேதியில் பாங்கில் கொண்டு செலுத்தி பில்லை ரத்துசெய்து வாங்கிக்கொண்டு போகும்படிக்கும் ஒரு நோட்டீஸைக் கொடுத்துவிடுவார்கள். அதேமாதிரி கெடுத்தேதி யில் பணத்தைக் கட்டிவிட்டு அந்த வியாபாரி பில்லை ரத்து செய்து வாங்கிக்கொண்டு போய்விடுவார். பாங்கர்கள் அனுப்பிய பில்லை ஒப்புக்கொள்ளாமல் திருப்பி யனுப்பித்தாலாவது, ஒப் புக்கொண்டு கெடுத்தேதியில் பில் தொகையைச் செலுத்தத் தவறினாலாவது பாங்கர்கள் சட்டப்படி யேற்பட்டிருக்கிற 'நோடரி' (Notary) ஆபீசரிடம் பில்லை அனுப்பி அவர்முன் னால் பில்தொகையைச் செலுத்தாமலிருந்து விட்டதாகத் தாகல் செய்துவிடுவார்கள். அப்படிச் செய்வதற்கு ப்ரொடெஸ்ட் (Protest) செய்கிறதென்று சொல்லப்படும்.

யார் பேருக்கு பில் எழுதப்பட்டிருக்கிறதோ அவர் தொகையைக் கெடுத்தேதியில் கொடுக்கத்தவறினால், மேற்கூறிய பிரகாரம் பாங்கர்களால் டிஸ்கவுண்டு செய்யப்பட்ட பில்லுக்கு பில் எழுதிக்கொடுத்த வியாபாரியிடம் பாங்கர்கள் பணத்தைப் பெற்றுக்கொள்ளுவார்கள். இதிலும் பாங்கர்கள் பில் சம்மந்த மாய்க் கொடுக்கும் தொகைகளுக்கு இரண்டுபேர் ஜவாப்தாரிக ளாகவிருப்பதைக் காணலாம். வியாபாரிகளுக்கும் இதன்மூலமாய் எவ்வளவு சௌகரியங்கள் இருக்கிறதென்பதும் தெரியவரும்.

வியாபாரிகள் ஒருவருக்கொருவர் சமயங்களில்ஒத்தாசைசெய்து கொள்ளும்பொருட்டு இந்தமாதிரி பில் எழுதிப் பாங்கர்களிடம் டிஸ்கவுண்டு செய்கிறது வழக்கம். இம்மாதிரி ஒழுங்கான வியாபாரமுறைக்கு விரோதத் தப்புப்பிரயோகம் செய்யும் பில்களையும் பாங்கர்கள் உண்மையாகவெண்ணி டிஸ்கவுண்டு செய்யும்படித்தான் இருக்கும். நாணயம் ஒழுங்காக இருக்கும்வரையில் ஒரு கேடும் வராது. இம்மாதிரி பில்களுக்குக் கெடுத்தேதியில் பணம் கொடுக்கத்தவறி எழுதினவரும் பில்தொகையைப் பாங்கர்களிடம் கொடுக்காமல் சால்ஜாப்புசொல்ல ஆரம்பித்தால்—பில் சம்மந்தப்பட்ட இருவருடைய நாணயமும் தவறி அவர்கள் தப்பான பில் எழுதின சமாசாரமும் வெளிப்பட்டால்—பாங்கர்களுக்கே ஆச்சரியத்தை யுண்டாக்கும். பணத்தைக் கடன் கொடுப்பதில் பாங்கர்கள் எவ்வளவு ஜாக்கிரதையாய் இருந்தபோதிலும் அவர்களையும் மிகத் தந்திரமாய் ஏமாற்றி மோசம் செய்கிறதானது வரவர மிக சகஜமாகவிருக்கிறது. அதற்குத் திருஷ்டாந்தங்கள் நமக்குப் பலவாறு தெரிந்தும் இருக்கின்றன. கேள்விப்பட்டும் இருக்கிறோம். அதனால் வியாபாரத்தையும் நிறுத்திவிட முடியாது. பாங்குகளையும் மூடமுடியாது.

## நடைமுதல் கணக்கில் அதிகப் பற்றுவரவு செய்தல் (Overdrafts.)

மேற்கூறியவைகளைத் தவிர வேறு ஒரு சௌகரியம் வியாபாரிகளுக்குபாங்கர்கள்செய்கிறார்கள். அதுவியாபாரிகளுக்குமிகவும் உபயோகமாகவும், அவசியமாகவும் இருக்கிறது. ஏற்கனவே நடைமுதல்கணக்குகளின் உபயோகங்களைப்பற்றிச்சொன்னோம். அதில்போட்ட பணத்தைத் திரும்பி வேண்டியசமயத்தில் வாங்கிக் கொள்ளலாம் என்பதுமாத்திரம் சொல்லப்பட்டது. தகுந்த வியாபாரிகளுக்குப் பாங்கர்கள், அவர்கள்கணக்கில் பணமில்லாம

விருந்தாலும் அவரவர் யோக்யதைக்குத் தக்கவாறு இவ்வளவு ரூபாய் வரையில் அதிகமாக வாங்கிக்கொள்ளலாம் என்று அனுமதி கொடுப்பார்கள். வியாபாரிகளுக்கு எதிர்பாராமல் அடிக்கடி பணத்திற்கு முடை ஏற்படும். ஒவ்வொரு சமயமும் கடன் வாங்குவதற்கு மனுச் செய்துகொண்டிருப்பதும் சிரமசாத்திய மாகவிருக்கும். கடனுக்கு மனுக்கொடுத்து மனு சாங்க்ஷன் ஆகிறவரையில் முடை தாங்காது. அப்படி ஏற்படும் முடை யானது சொல்ப காலத்திற்குத்தான் இருக்கும். அதாவது உயர்ந்தது 10நாளைக்குத்தான் வேண்டியதாகவிருக்கும். இப்படி சொல்ப காலங்களுக்கு அவசரமாகவேண்டிய தொகைகளுக்காக கடன் விண்ணப்பம் செய்துகொண்டிருப்பது சாத்தியமில்லை. இதற்காகத்தான் நடைமுதல் கணக்குகளில் அதிகப் பற்றுவரவு செய்துகொள்ள அனுமதி கொடுக்கப்படுகிறது. இந்தமாதிரி சௌகரியம் யோக்யதையுள்ளவர்களெல்லோருக்குமே கொடுப்ப தில்லை. யோக்யதையோடுகூட யாருக்கு அவசியமானதென்று பாங்கர்களுக்குத் தோன்றுகிறதோ அவர்களுக்கு மாத்திரம்தான் இவ்வித சௌகரியத்தைச் செய்துகொடுப்பார்கள். அதிகப்பற் றாக நடைமுதல் கணக்கில் வாங்கின தொகைகளை நீண்டகாலம் வைத்திருக்கப் பாங்கர்களனுமதி கொடுக்கமாட்டார்கள். நீண்ட காலக் கடனாக இந்த அதிகப்பற்றுத் தொகையைப் பாவித்து அப்போதைக்கப்போது திருப்பி கொடுக்காமல்வைத்துக்கொண்டு விட்டால் பாங்கர்கள் அப்படி அதிகநாள் வைத்துக்கொண்ட வர்களுக்கு இந்த சௌகரியத்தை ரத்து செய்துவிடுவார்கள். முக்கியமாய் இவ்வித சௌகரியம் வியாபாரிகளுக்கே கொடுக்கப் படுமல்லாமல் சாமானியஜனங்களுக்குக் கொடுக்கப்படுகிறதில்லை. அதிகப்பற்றாக நடைமுதல்கணக்கிலிருந்து வாங்குவதற்கும் எப் படிச் சொந்தப்பணத்தை வாங்குவதானால் செக் எழுதிக்கொடுக் கிறார்களோ அதேமாதிரி அதிகப்பற்றாக வாங்குகிறதொகைகளுக்

கும் செக்குத்தான் எழுதிக்கொடுக்கவேண்டும். இங்கும் தமது கணக்கில் எவ்வளவு தூரம் வரையில் அதிகப்பற்றாக வாங்கலாம் என்று ஒருவனுக்கு பாங்கர்களால் அனுமதிகொடுக்கப்பட்டிருக்கிறதோ அந்த எல்லைக்கு மீறி அதிகத் தொகைகளுக்குச் செக் எழுதிக் கொடுத்தனுப்பினால் அம்மாதிரிச் செக்குக்குப் பாங்கர்கள் பணம் கொடுக்கமாட்டார்கள். "எழுதினவரைக் கேட்டுக் கொள்ளவும்" என்று செக்மேல் எழுதிக் கையொப்பமிட்டுக் கொண்டுவந்தவரிடம் திருப்பிக்கொடுத்துவிடுவதனால் செக் எழுதினவருக்குண்டாகும் கெடுதிகளைப்பற்றி ஏற்கனவே சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் முன் யோசனையுள்ளவர்களாக இருந்தால் எல்லைக்கு மீறின தொகைகளுக்கு செக் எழுதமாட்டார்கள். இம்மாதிரி நடைமுதல் கணக்கில் அதிகப் பற்றுவரவு செய்யும்படியான சுதந்தரமும் ஜாமீனில்லாமல் பாங்கர்கள் கொடுக்கமாட்டார்கள். கவர்ன்மெண்டு பத்திரத்தின் ஜாமீன் பேரிலோ அல்லது வேறு ஜாமீன் பேரிலோதான் அதிகப்பற்று செய்துகொள்ள அனுமதி கொடுப்பார்கள். எந்த எல்லைமட்டும் அதிகப்பற்று செய்யப்படலாம் என்று சுதந்தரம் கொடுக்கிறார்களோ அத்தனை ரூபாய்க்கு மேற்கூறியபடி ஜாமீன்பத்திரம் எழுதிப் பெற்றுக்கொண்ட பிறகுதான் அந்த சுதந்தரத்தை உபயோகிக்க பாங்கர்கள் அனுமதிகொடுப்பார்கள். இந்த அதிகப்பற்றுக் கணக்கில் வாங்கும் தொகைகள் கூடிய சீக்கிரம் திருப்பிக் கொடுக்கப்படவேண்டும் என்ற நிபந்தனையில் மாத்திரம் கொடுக்கப்படுகிறது. இந்த சுதந்தரம் இருக்கிற வியாபாரிகள் தாங்கள் வியாபாரத்தில் போட்டிருக்கும் தங்களது முதலோடுகூடி இந்தத் தொகையையும் சேர்த்துக்கொண்டுவிட்டால் அடிக்கடி பற்றுவரவு செய்ய முடியாமல் போய்விடும். இதைக் கவனித்துக் கொண்டு பாங்கர்களும் இந்த சுதந்தரத்தை ரத்துசெய்துவிடுவார்கள். முடை ஏற்பட்ட சமயத்தில் மாத்திரம் உபயோகித்

துக்கொண்டும் அப்போதைக்கப்போது திருப்பிக் கொடுத்துக் கொண்டு இந்த சுதந்தரத்தைப் புத்திசாலித்தனமாக உபயோகப் படுத்திக்கொண்டிருப்பவர்களுக்கு இது மிகவும் உபயோகமாக விருக்கும்.



# ஓர் ஊரிலிருந்து மற்றோர் ஊருக்குப் பணம் அனுப்புதல்.

# (Transmission of moneys from one place to another.)

இதுவரையில் பாங்கர்களால் வட்டிக்கு டிபாசிட்டுகள் வாங்குவதைப்பற்றியும், பாங்கர்கள் தேவையுள்ளவர்களுக்கு இன்ன இன்ன வகைகளில் பணம் கொடுத்து ஒத்தாசை செய்கிறார்கள் என்பதைப்பற்றியும் சொன்னோம். இவைகளைத் தவிர இன்னும் பாங்கர்கள் எவ்வகையில் ஜனங்களுக்குச் சௌகரியம் செய்கிறார்கள் என்று பார்ப்போம். ஓர் ஊரிலிருந்து மற்றோர் ஊருக்குப் பணம் அனுப்பவேண்டுவதற்கும் பாங்கர்கள் மிக சௌகரியங்களைச் செய்கிறார்கள். முக்கியமான இடங்களிலெல்லாம் அனேகமாய்ப் பாங்கிகள் ஏற்பட்டிருக்கும். எந்த விடத்தில் வியாபாரம் அதிகமாய் நடக்கிறதோ அந்த விடத்தில் அவசியம் பாங்கிகள் இருந்தே தீரும். பெருத்த முதலைக் கொண்டும், ஏராளமான டிபாசிட்டுகளைக் கொண்டும் வேலை செய்யும் பாங்கர்கள் முக்கியமான வியாபார ஸ்தலங்களில் தங்களது கிளை ஆபீசுகளை வைத்து வேலைசெய்துகொண்டிருப்பார்கள். இல்லாவிடில் அவ்வூரிலுள்ள பாங்கோடு கணக்குகள் வைத்துக்கொண்டாவது இருப்பார்கள். ஓர் ஊரிலிருந்து மற்றோர் ஊருக்குப் பணம் அனுப்பவேண்டியதாகவிருந்தால் அவ்வூரிலுள்ள பாங்கியில் மற்றொருஊருக்கு எவ்வளவு ரூபாய் அனுப்பவேண்டியிருக்கிறதோ அந்த ரூபாயைக்கொடுத்துவிட்டு 'இன்ன ஊரில் இன்னாருக்கு இத்தனை ரூபாய் அனுப்பவேண்டும்' என்று பாங்கர்களிடம் சொன்னால், எந்த ஊருக்குப் பணம் அனுப்ப வேண்டுமோ அந்த ஊரிலுள்ள பாங்குக்கு இவ்வூரிலுள்ள பாங்கர்கள் ஓர்உண்டியலைக் கொடுக்கிறார்கள். யாருக்குப் பணம்

கொடுக்கவேண்டுமோ அவருடைய பேர் அந்த உண்டியில் எழுதியிருக்கும். அந்த உண்டியைப் பணம் சேரவேண்டியவர்களுக்கு அனுப்பிவிட்டால் அதை அவ்வூரிலுள்ள பாங்கரிடம் கொண்டுபோய்க் கொடுத்துத் தொகையை வாங்கிக்கொள்ளுவார்கள். செக்குகளைக்கிராஷ்செய்து சாமான்னியதபாலில் அனுப்புவதுபோல் இந்த உண்டிகளையும் கிராஸ்செய்து அனுப்புவதுமுண்டு. இம்மாதிரி உண்டிகளைக் கொடுப்பதினால் அனேகம் சௌகரியங்கள் இருக்கின்றன. பணமாய் இன்ஷியூர் தபாலில் அனுப்பவேண்டியதாக விருந்தால் அனுப்பவேண்டிய பணத்திற்கு முழுநோட்டு வாங்கிக்கொள்ளவேண்டும். சில சமயங்களில் சுலபமாய் முழுநோட்டுகள் அகப்படா. வட்டம் கொடுத்துத்தான் வாங்கும்படியாகவிருக்கும். சில சமயங்களில் வட்டம் கொடுத்தாலும் முழு நோட்டுகள் அகப்படா. முழு நோட்டுகள் வாங்கிக்கொண்டு வந்தபிறகு அவைகளை இன்ஷியூர் கவரில் போட்டுத்தைத்து அரக்குசீல்செய்து தபாலாபீசுக்குப் போய் இன்ஷியூர் செய்துவிட்டு வரவேண்டும். இப்படிக்கில்லாமல் பாங்கரிடம் கிராஸ் செய்யப்பட்ட உண்டி ஒன்று மேலே சொன்ன பிரகாரம் வாங்கிவிட்டால் சாதாரண தபாலில் போட்டுவிடலாம். ஒருசமயம் அந்தத் தபால் சரியாகப் போய்ச் சேராவிட்டாலும் எந்தப்பாங்கருக்கு உண்டி எழுதப்பட்டிருக்கிறதோ அவர்களுக்கு இன்னாரால் எழுதப்பட்ட இன்ன நம்பருள்ள உண்டி கெட்டுப்போய்விட்டதென எழுதிவிட்டால் ஒருவித நஷ்டமும் ஏற்படாது. கெட்டுப்போன உண்டிக்கும் பிரதி உண்டி சுலபமாக வாங்கி யனுப்பிவிடலாம். பாங்கர்கள் ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு அனுப்பவேண்டிய பணங்களுக்கு உண்டிகள் கொடுப்பதால் அவர்கள் தங்களுடைய பணத்தை இதர ஊர்களில் வைத்திருக்கவேண்டும். அம்மாதிரி வைத்துக்கொண்டு தங்க

ளுக்குப்பிரதிப்பிரயோசனம் இல்லாமல் ஜனங்களுக்குச்சௌகரியம் செய்யமுடியாதாகையால் கொடுக்கும் உண்டிகளுக்கு நூற்றுக்கு ஏதாவது கமிஷன் வாங்கிக்கொள்ளுவார்கள். ஓர் ஊரிலிருந்து மற்றொரு ஊருக்குப் பணம் அனுப்புவதற்குப் பாங்கர்கள் செய்யும் சௌகரியம்போல் வேறு ஒருவரும் செய்யமுடியாது. ஒரு இடத்தில் உள்ள பாங்கில் நடைமுதல் கணக்கு வைத்திருக்கப்பட்ட ஒருவன் மற்றொரு ஊருக்குப் பணம் அனுப்பவேண்டியிருந்தால் தன்னுடைய பாங்கர்பேரில் தன்னுடைய கணக்கில் ஒரு செக்கை எழுதிக் கிராஸ்செய்து எந்த ஊருக்கு யாருக்கு அனுப்பவேண்டுமோ அவரிடம் அனுப்பிவிட்டால் அவ்வூரிலுள்ள பாங்கர்கள் வழியாய் அந்தச் செக்கின் தொகையை வாங்கிக்கொள்ளலாம். இப்மாதிரி ஒரு ஊரிலுள்ள ஒருவர் மற்றொரு ஊருக்கு அனுப்பவேண்டிய தொகைகளுக்கு உண்டி கொடுக்கிற வழக்கம் நமது நாட்டில் புராதனமாய் நடந்துகொண்டிருக்கிறது. தரிசனை உண்டி, நடப்பு வட்டி, உண்டி முதலான பலவகை உண்டிகள் நமது நாட்டிலுள்ள புராதன வியாபாரிகள் இமயமலை முதல் கன்னியாகுமாரி வரையிலுள்ள எந்த இடத்திற்கும் கொடுத்துக்கொண்டிருந்தார்கள் என்று தெரியவருகிறது. இம்மாதிரி ஒருவருக்கு ஒருவர் செக் கொடுப்பதினால் ரொக்க ரூபாய் கையில் வைத்துக்கொள்ளும்படியான நிர்பந்தமும் நீங்குகிறது. அனேகமாய் எல்லோருக்கும் பாங்கிகளில் கணக்குகள் இருந்து ஒருவர் மற்றொருவருக்குக்கொடுக்கவேண்டிய தொகைகளுக்குச்செக்குகள் கொடுத்தால் செக் எழுதிகொடுத்தவர் கணக்கில் பற்றெழுதி யாருக்குச் செக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறதோ அவருடைய கணக்கில் செக்குத் தொகையை வரவு வைத்துக்கொண்டுவிடுவார்கள். பாங்கில் எல்லோருக்குமே கணக்குகள் இருந்துவிட்டால் செலாவணியாகும் நாணயமானது செக்குகளாகவே ஏற்பட்டுவிடும். பணத்தைக் கண்ணால்கூடப்பார்க்கவேண்டியதில்லை

## நாணயமாற்றல்.

## (Foreign Exchange.)

தினசரிப் பத்திரிகைகளில் "நாணயமாற்றல்" என்ற தலைப்பின்கீழ் ஒவ்வொரு தேசத்தின் நாணயத்திற்கும் விலை நமது தேசத்தின் நாணயம் இவ்வளவு என்று போட்டிருப்பதைப் பெரும்பான்மையோர் கவனித்திருக்கலாம். அயல் தேசத்திலிருந்து சரக்குகள் இந்தத் தேசத்திற்கு வரவழைக்கும் வியாபாரிகளுக்கும், இத்தேசத்திலிருந்து அயல் தேசத்திற்குச் சரக்குகள் அனுப்பும் வியாபாரிகளுக்கும் இந்த அறிக்கை மிகவும் உபயோகமாகவிருக்கும். உள்நாட்டு வியாபாரிகள் ஒருவருக்கொருவர் வியாபார சம்பந்தமாய் எழுதிக்கொடுக்கும் உண்டிகள்போல்தான் அயல்நாட்டு வியாபாரிகளின்பேரிலும் உண்டிகள் எழுதிக்கொடுப்பார்கள். இம்மாதிரி அயல்நாட்டு உண்டிகள் சுலபமாக மாற்றுவதற்குப் பிரத்தியேகமான பாங்குகள் ஏற்பட்டிருக்கின்றன. அயல்நாட்டு வியாபாரிகள் இந்தத் தேசத்திலுள்ள வியாபாரிகள்பேரில், தாங்கள் விற்கும் சரக்குகளுக்காக எழுதிக்கொடுக்கும் உண்டிகளும், இந்தத் தேசத்து வியாபாரிகள் அயல்நாட்டு வியாபாரிகளுக்கு அனுப்பும் சரக்குகளுக்காக எழுதிக்கொடுக்கும் உண்டிகளும் மேற்சொன்ன பாங்குகளால் டிஸ்கவுண்டு (discount) செய்யப்படுகின்றன. இவ்விதமான பாங்குகளுக்கு நாணயமாற்றும் பாங்க் அல்லது எக்ஸ்சேஞ்சு பாங்க் (Exchange Bank) என்பது பெயர். இந்தப் பாங்குகளுள் சில இங்கிலாந்து தேசத்தில் தலைமை ஆபீஸ் வைத்துக்கொண்டு நமது தேசத்திலும் மற்ற தேசத்திலும் உள்ள முக்கியமான வியாபார ஸ்தலங்களில் கிளை ஆபீசுகள் வைத்துக்கொண்டு வியாபாரிகளுக்கு மிகவும் சௌகரியமாக அவர்கள் உண்டிகளை அவ்வப்போது டிஸ்கௌண்டு (dis-

count) செய்கின்றன. இங்கிலாந்தில் தலைமை ஆபீஸ் வைத்திருக்கும் எக்ஸ்சேஞ்சு பாங்குகள் இந்தத் தேசத்தில் கிளை ஆபீசுகள்வைத்திருப்பதனால் இங்கிலாந்திலுள்ளவியாபாரிகளின் பேரால் நமதுதேச வியாபாரிகள் எழுதிக்கொடுக்கும் உண்டிகளின் தொகைகளை, நமதுநாட்டு வியாபாரிகளின்பேரால் இங்கிலாந்து தேசத்திய வியாபாரிகள் எழுதிக்கொடுக்கும் உண்டிகளின் தொகைகளில் ஈடு செய்துகொள்ளச்சௌகரியமாகவிருக்கிறது. இம்மாதிரி ஈடுசெய்துகொண்டபோதிலும் ஏற்றுமதியாகும் சரக்குகளின் விலையும் இறக்குமதியாகும் சரக்குகளின் விலையும் சமமாகவிராவாமையால் மேற்கூறியபடி ஈடுசெய்துகொண்டது போக அதிகத்தொகையை ஒருதேசத்திலிருந்து மற்றொரு தேசத்திற்கு அனுப்பும்படி நேரிடும். இது சம்பந்தமாய்த் துரைத்தனத்தார் இந்த எக்ஸ்சேஞ்சு பாங்குகளுக்கு உதவி செய்கிறார்கள். அதெப்படியெனில் நமது தேசத்தில் உத்தியோகம் செய்து உபகாரச் சம்பளம் (Pension) பெற்று இங்கிலாந்தில் வசிக்கும் ஜனங்களுக்குக் கொடுக்கவேண்டிய உபகாரச் சம்பளங்களும், இந்தியா கவர்ன்மெண்டாருக்குக் கடன் கொடுத்திருக்கும் ஆங்கிலேயர்களுக்கு அந்தக்கடன்தொகைக்கு உள்ள வட்டியையும் இந்தியா பொக்கிஷத்திலிருந்து இங்கிலாந்துக்கு அனுப்பும்படியாக விருக்கிறது. இது சம்பந்தமாய்த் துரைத்தனத்தார் எக்ஸ்சேஞ்சு பாங்குகளோடு கலந்து கொண்டு தாங்கள் இவ்விடமிருந்து இங்கிலாந்துக்கு அனுப்ப வேண்டிய தொகைகளை இவ்விடத்திய எச்ஸ்சேஞ்சு பாங்குகளிடம் செலுத்திவிட்டு இங்கிலாந்தில் இந்த எக்ஸ்சேஞ்சு பாங்குகளின் தலைமை ஆபீசுகளிலிருந்து இவ்விடம் செலுத்திய தொகையை வாங்கிக்கொள்ளுகிறார்கள். இவ்விதமாக வியாபார சம்பந்தமாய் நமது தேசத்திலிருந்து இங்கிலாந்துக்கும் இங்கிலாந்திலிருந்து நமது தேசத்திற்கும் அனுப்பவேண்டிய தொகைக்கப்போது

 3692

தொகைகள் அனுப்புவதற்குத் துரைத்தனத்தார் சௌகரியம் செய்யத் திறமையுள்ளவர்களாக இருக்கிறார்கள்.

நமது தேசத்திலிருந்து ஏற்றுமதியாகும் சரக்குகளின் மொத்த விலை அயல் தேசத்திலிருந்து நமது தேசத்திற்கு வரும் சரக்குகளின் விலையைவிட மிக அதிகமாகவிருந்து அயல்தேசத்திய சரக்குகளின் விலையை ஈடுசெய்துகொண்டது போக அயல் நாட்டுக்கு ஏற்றுமதியான சரக்குகளுக்காக அதிகப்பணம் நமது தேசத்திற்கு வரவேண்டியதாக இருந்தபோதிலும், நமதுநாட்டிலிருந்து இங்கிலாந்து முதலிய தேசங்களுக்கு அனுப்பவேண்டினவாக விருக்கும் தொகைகள் பலவழிகளில் ஏற்படுவதனால் ஏற்றுமதியான சரக்குகளின் முழுவிலையையும் ஈடுசெய்துகொள்வது கஷ்டமாகவிருக்கிறது. இது நிற்க நமது தேசத்திலிருந்து அயல்நாடுகளுக்கு எவ்வளவு வழிகளில் பணம் போகிறதென்று பார்ப்போம். அயல் நாட்டார் நமது தேசத்தில்வந்து பலவிதமான வியாபாரங்களைச் செய்துகொண்டு அதனால் சம்பாதிக்கும் லாபங்களை அவர்கள் தமது தேசத்திற்கு அனுப்பிக்கொண்டே இருக்கிறார்கள். நமதுதேசத்தில் பிழைக்க வந்திருக்கும் ஆங்கிலேயர்கள் ஒவ்வொரு மாதமும் தங்களது தேசத்திற்கு ஏராளமான தொகைகளை அனுப்பிக்கொண்டே இருக்கிறார்கள். இம்மாதிரி அனுப்பப்படும் தொகைகள் எல்லாம் இத்தேசத்திலுள்ள எக்ஸ்சேஞ்சு பாங்குகளில் செலுத்தப்பட்டு அவர்களிடம்உண்டிகள் வாங்கிஅனுப்பப்படுகின்றன. அயல் நாட்டிலிருந்து நமதுதேசத்திற்கு வரவேண்டியதொகைகளை ஈடு செய்துகொள்வதற்கு மேற்கூறியபடி உண்டிகள் கொடுப்பதானது எக்ஸ்சேஞ்சு பாங்குகளுக்குச் சௌகரியமாகவிருக்கிறது. சீக்கிரத்தில் அயல் நாட்டுக்குத் தொகைகளைச் சேர்ப்பிக்கும்படியிருந்தால் தந்தி மூலமாகவும் இந்த எக்ஸ்சேஞ்சு பாங்கர்கள் அனுப்புகிறார்கள். அனேகமாய் இந்தியாவிலிருந்து பிறதேசங்

களுக்கு அனுப்பப்படும் சரக்குகள் இந்தியாவிலிருந்து இறக்குமதியாகும் சரக்குகளைவிட அதிகமாகவேயிருக்கும். அது காரணம்பற்றி மேற்கூறியபடி அயல்நாடுகளுக்கு அனுப்பும்படியிருக்கும் தொகைகளை ஈடுசெய்துகொண்டதுபோக பாக்கித் தொகை அயல்நாடுகளிலிருந்து நமது தேசத்திற்கு வரும்படியாகவிருக்கும். அப்படி மிகுதியாக அனுப்பும்படியிருக்கும் தொகைகள் துரைத்தனத்தார் உதவியில்லாமற்போனால் பொன் அல்லது வெள்ளியாக இத்தேசத்திற்கு அனுப்பும்படியாகவிருக்கும். இந்தியா கவர்ன்மெண்டிலிருந்து இங்கிலாந்துக்கு அங்கே ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் இந்திய மந்திரி ஆபீஸ் முதலானவைகளின் பொருட்டு ஒவ்வொரு வருஷமும் சுமார் 45 கோடி ரூபா அனுப்பும்படியாக விருக்கிறது. இந்தத் தொகைக்கு இந்தியா மந்திரியானவர் (Secretary of State for India) இந்தியா கவர்ன்மெண்டின்பேரில் குறுகிய காலத்தில் கொடுக்கும்படியான பத்திரங்கள் எழுதி வெளியிடுகிறார். வியாபார சம்பந்தமாய் இந்தியாவுக்குத் தொகைகள் அனுப்பவேண்டியனவாகவிருக்கும் இங்கிலாந்திலுள்ள எக்ஸ்சேஞ்சு பாங்கர்கள் மேற்கூறிய பத்திரங்களைத் தங்களுக்கு வேண்டிய தொகைகளுக்கு வாங்கி இந்தியாவிலுள்ள தங்கள் கிளை ஆபீசுகளுக்கு அனுப்புகிறார்கள். அப்பத்திரங்கள் இந்தியாவிற்கு வந்தவுடன் இந்தியாகவர்ன்மெண்டார் அவைகளின்தொகைகளைக்கொடுத்து விடுகிறார்கள். இவ்விதமாக இந்தியாவிலிருந்து ஏற்றுமதியாகும் சரக்குகளின் தொகைகள் ஈடுசெய்யப்பட்டுவருகின்றன. இம்மாதிரி இந்தியா மந்திரியால் வெளியிடப்படும் பத்திரங்களுக்கு 'கௌன்சில் பில்ஸ்' (Council bills) என்பதுபெயர். இப்பத்திரங்களில் கண்டிருக்கும் தொகைகள் இந்தியாவில் செலாவணியாகும் ரூபாநாணயத்தில்தான்எழுதப்பட்டிருக்கும். (Amount of the bills Stated in Indian currency.)

இதேமாதிரி வியாபார சம்பந்தமாய் இந்தியாவிலிருந்து இங்கிலாந்துக்குத் தொகைகள் அனுப்பவேண்டியதாகவிருந்தாலும் துரைத்தனத்தாரால் இங்கிலாந்தில் உள்ள இந்தியா மந்திரியின் பொக்கிஷத்திலிருந்து கொடுக்கும்படியாகப் பத்திரங்கள் வெளியிடப்படுகின்றன. இப்பத்திரங்கள் இங்கிலாந்தில் செலாவணியாகும் நாணயத்தில் வரையப்பட்டிருக்கும். இவைகளுக்கு "ரிவர்ஸ் கௌன்ஸில்ஸ்" (Reverse councils) அல்லது "ஸ்டர்லிங் பில்ஸ்" (Sterling bills) என்பது பெயர். இந்தியாவிலுள்ள எக்ஸ்சேஞ்சு பாங்கர்கள் இங்கிலாந்திற்கு அனுப்பவேண்டிய தொகைகளுக்கு மேற்சொன்ன "ரிவர்ஸ் கௌன்ஸில்" பத்திரங்களை வாங்கி அனுப்புவார்கள்.

இம்மாதிரி துரைத்தனத்தாரால் வெளியிடப்படும் பத்திரங்களை வாங்கி அனுப்புவதில் காலதாமதம் ஆகிறபடியால் துரைத்தனத்தார் தந்திமூலமாயும் தொகைகளை அனுப்புவதற்கு வேண்டிய சௌகரியம் செய்கிறார்கள். இது நிற்க, நமது தேசத்தின் நாணயங்களின் விலை அயல்தேசங்களினாலும், அயல் தேசங்களின் நாணயங்களின் விலை நமது தேசத்தினாலும் எவ்விதமாக நிர்ணயிக்கப்படுகின்றன என்று பார்ப்போம். ஒவ்வொரு தேசத்திலுள்ள வியாபாரிகள் தாம் தாம் வியாபாரம் செய்யும் சரக்குகளின் விலைகளைத் தம்தம் தேசங்களில் செலாவணியாகவிருக்கும் நாணயத்தினால்தான் சொல்லுவார்கள். இந்தியாவில் பருத்தியின் விலை என்னவென்று ஒரு வியாபாரியைக் கேட்டால் இவ்வளவு எடையுள்ள மூட்டை இத்தனை ரூபா என்று சொல்லுவார். இங்கிலாந்திலுள்ள ஒரு வியாபாரியை நூல் விலை கேட்டால் இவ்வளவு நிறையுள்ள ஒரு மூட்டைக்கு இவ்வளவு பவுன் என்று கூறுவர். சீன தேசத்திலுள்ள ஒரு வியாபாரியைப் பட்டு என்ன விலை என்று விசாரித்தால் மூட்டை

ஒன்றுக்கு இவ்வளவு பேடல் என்றுரைப்பார். ஆகையால் ஒவ்வொரு தேசத்திலுமுள்ள வியாபாரிகளும் தாம்தாம் இருக்கும் இடத்தில் செலாவணியாகும் நாணயத்தினால்தான் தம்தம் சரக்குகளுக்கு விலை கூறுவார்கள். அதுகாரணம் பற்றி அயல் நாட்டிலிருந்து இந்நாட்டுக்கு வரும் சரக்குகளின் விலையை இந்நாட்டில் செலாவணியாகும் நாணயத்தினால் இங்கிருக்கும் வியாபாரிகள் கொடுத்துவாங்கும்படியாகவிருக்கிறபடியால் அந்த நாட்டு நாணயத்தை ஈடு செய்வதற்கு இந்த நாட்டு நாணயம் எவ்வளவுகொடுப்பது என்பது நிர்ணயம் செய்யப்படவேண்டும். சாதாரணமாக எப்படி ஒருவர் வியாபாரம் செய்யும் சரக்குகள் அதிகக்கிராக்கியாயிருக்கும்போதுவிலைஉயர்ந்தும்,கிராக்கிஇல்லாவிடில் விலை குறைந்தும் விற்குமோ, அதேமாதிரி ஒருதேசத்திலிருந்து மற்றொரு தேசத்திற்கு அனுப்பவேண்டிய தொகை அதிகமாக விருந்தால் அனுப்ப வேண்டிய தேசத்தின் நாணயமானது எந்தத் தேசத்தினால் தொகை அனுப்பப்படுகிறதோ அந்தத் தேசத்தில் அதிக கிராக்கியாய்விடும். உதாரணமாக இங்கிலாந்திலிருந்து நமது தேசத்திற்குத் தொகைகள் ஏராளமாக அனுப்பவேண்டி இருந்தால் அப்படி அனுப்பவேண்டியவர்கள் இந்தியா மந்திரியினால் (Secretary of State for India) வெளியிடப்படுகின்ற மேற்கூறிய கௌன்சில் பில்களை (Council bills) வாங்கியனுப்புவார்கள். இந்தக் கௌன்சில் பில்கள் ரூபா நாணயத்தில் வரையப்பட்டிருப்பதனால் இவ்வளவு ரூபா பொறுமானமுள்ள கௌன்சில் பில்களுக்கு இவ்வளவு பவுன் என்று துரைத்தனத்தாராலேயே வரையறுக்கப்பட்டிருந்தபோதிலும், இந்தியாவிற்குப் பணம் அனுப்பவேண்டிய முடையை உத்தேசித்துக் கௌன்சில் பில்கள் சாதாரணமாக என்ன விலைக்குக் கிடைக்குமோ அதைவிட அதிகமான விலை கொடுத்து வாங்கும்படியாகத்தானிருக்கும். ஆகையால்

ஒரு தேசத்தின் நாணயம் மற்றொரு தேசத்தில் விற்கும் விலையானது அந்தத் தேசத்திற்குப் பிறதேசத்திலிருந்து அனுப்பும்படி யிருக்கும் தொகையைப் பொறுத்ததாகவிருக்கிறது. ஒரு தேசத்திலுள்ள சரக்குகளை ஏராளமாகப் பிற தேசத்திற்கு அனுப்பினால்தான் அந்தத் தேசத்திற்குப் பிறதேசத்திலிருந்து ஏராளமான தொகை அனுப்பும்படியாக விருக்கும். ஆகை யால் ஒவ்வொரு தேசத்திலும் செலாவணியாகும் நாணயத்திற் குப் பிற தேசத்தில் விலை ஏற்படுத்துவதானது அந்தத் தேசத் தின் ஏற்றுமதிச் சரக்குகளைப் பொறுத்ததாகவிருக்கிறது.

சமீபத்தில்நடந்த ஐரோப்பியயுத்தகாலத்தில்நமதுதேசத்தி லிருந்துஏராளமான சாமான்கள் அனுப்பும்படி நேர்ந்தபடியால் நமதுதேசத்திலுள்ள ரூபா நாணயத்திற்கு வெகுகிராக்கி ஏற்பட் டது. சாதாரண காலங்களில் பதினைந்து ரூபாவுக்கு ஒருபவுன் வாங்கலாம். சண்டை நடந்த காலத்தில் பவுன் விலை எட்டு ரூபாவுக்கும் கீழ் இறங்கிவிட்டது. ஆகையால் ஒவ்வொரு தேசத்தின் நாணயமாற்றலும் அந்தத் தேசத்தின் வியாபாரத் தைப் பொறுத்ததாகவிருக்கிறது.

வியாபாரமுறைமையில் ஒரு தேசத்திலிருந்து மற்றோர் தேசத்திற்கு அனுப்பவேண்டிய தொகை அதிகமாகவிருந்து அந்தத் தொகையும் சீக்கிரமாய் அனுப்பும்படியாக விருந்தால் அந்த முடையை உத்தேசித்து அதிகப்பணம் கொடுத்து அயல் நாட்டிற்கு நாணயம் அனுப்புவதினால் அயல் நாட்டு நாணயம் கிராக்கியாய்விடுகிறதென்றோம். அப்படி அயல்நாட்டு நாணயம் கிராக்கியாவதானது ஒரு தேசத்தின் வியாபாரத்தை எவ்விதம் பாதிக்கிறதென்று பார்ப்போம். உதாரணமாக இங் கிலாந்தையும் நமது தேசத்தையும் எடுத்துக் கொள்வோம். இங்கிலாந்திலிருந்து நமது தேசத்திற்கு வியாபார சம்பந்தமாய்

ஏராளமான தொகை அனுப்பவேண்டியதாக விருக்கிறதென்று வைத்துக்கொள்வோம். இந்தத் தொகையை அனுப்பவேண்டியதற்குப் போதுமான அளவு பொன்னாவது, வெள்ளியாவது, அல்லது கௌன்சில் பில்களாவது கிடைக்கவில்லையென்று எண்ணிக் கொள்வோம். இந்தியாவுக்கு அனுப்பவேண்டிய தொகை எப்படி அனுப்பப்படுவது? இங்கிலாந்திலுள்ள வியாபாரிகள் தங்களிடமிருக்கும் சரக்குகளை ஏராளமாக இந்தியாவுக்கு ஏற்றுமதி செய்ய எத்தனித்தும் இந்தியாவுக்கு அனுப்பவேண்டிய தொகைகளை ஈடு செய்வதற்கு முடியாது. இந்தியாவுக்குப் பணம் அனுப்பவேண்டியவர்களின் சங்கியை அதிகப்பட்டு அவர்களுள்போட்டி ஏற்பட்டால்இந்தியாவில் செலாவணியாக விருக்கும் ரூபா நாணயத்திற்கு அதிக கிராக்கி ஏற்பட்டுவிடுகிறது. இந்த சமயத்தில் இங்கிலாந்திலிருக்கும் வியாபாரி இந்தியாவிலுள்ள ரூபா நாணயத்திற்கு அதிக விலை கொடுக்கும்படி நேரிடுகிறது. அஃதாவது இந்தியாவிலிருந்து இங்கிலாந்தில் இறக்குமதியாகும் சரக்குகளுக்கு அதிக விலை கொடுக்கும்படி ஏற்பட்டுவிடுகிறது. இந்தியாவிலுள்ள சரக்குகள் இங்கிலாந்தில் மேற்கூறிய காரணத்தினால் கிராக்கியாய் விடுகிறது. சாமான்கள் கிராக்கியாகும் பக்ஷத்தில் வியாபாரிகள் அதிக சாமான்களைக் கிராக்கி விலைக்கு வாங்கமாட்டார்களாகையால் இங்கிலாந்தில் இந்திய தேசத்திலிருந்து இறக்குமதியாகும் சாமான்கள் மிகவும் குறைந்துவிடுகிறது. இந்தியாவிலுள்ள வியாபாரிகளோ, இச்சமயத்தில் இங்கிலாந்திலுள்ள நாணயம் இந்திய தேசத்தில் மிகவும் மலிவாக இருக்கிறபடியால் இங்கிலாந்திலிருந்து தங்களுக்கு வேண்டிய சாமான்களை ஏராளமாக வாங்கிக் கொள்வார்கள். அதுகாரணம் பற்றி இந்திய தேசத்தில் இங்கிலாந்திலிருந்து இறக்குமதியாகும் சாமான்கள் மிகவும் அதிகமாகவிருக்கும். ஆகையால் இந்தியாவின் ரூபா நாண

யம் கிராக்கியாகவிருந்தால் இந்தியாவிலிருந்து இங்கிலாந்துக்கு ஏற்றுமதியாகும் சாமான்கள் மிகக்குறைவாகவும் இங்கிலாந்திலிருந்து இந்தியாவுக்கு இறக்குமதியாகும் சரக்குகள் மிக அதிகமாகவும் ஆகின்றன. அதேமாதிரி இங்கிலாந்தில் செலாவணியாகும் பவுன் நாணயமானது இந்தியாவில் கிராக்கியாகவிருந்தால் அங்கிருந்து நமது தேசத்திற்கு இறக்குமதியாகும் சரக்குகள் குறைந்தும் நமது தேசத்திலிருந்து இங்கிலாந்துக்கு ஏற்றுமதியாகும் சரக்குகள் அதிகப்பட்டும் போய்விடும்.

சமீபத்தில் நடந்த ஐரோப்பிய யுத்தத்தின்போது இங்கிலாந்தில் செலாவணியாகும் பவுன் நாணயம் நமது தேசத்தில் பலகாரணம்பற்றி மிகவும் மலிந்துபோய்விட்டது. அந்த சமயத்தில் இங்கிலாந்திலிருக்கும் வியாபாரிகளோடு நமதுதேசத்திய வியாபாரிகள் ஏராளமான சரக்குகளை வாங்குவதாக ஒப்பந்தம் செய்துகொண்டு ஆரம்பத்தில் ஏராளமான லாபத்தை அடைந்தார்கள். இதைக்கண்டு நமது தேசத்திலுள்ள மற்ற வியாபாரிகள் தாங்களும் மிகுந்த லாபத்தைச் சம்பாதித்துவிடலாம் என்று எண்ணி ஏராளமானசரக்குகளை வாங்கிக் கொள்வதாக ஒப்பந்தம் செய்துகொண்டு விட்டார்கள். இம்மாதிரி எக்காலத்தில் அனேகம் வியாபாரிகள் ஏராளமான சரக்குகளுக்கு, ஆர்டர் (Order) செய்துவிட்டதனால் அவ்வளவு சரக்குகளையும் உடனே அனுப்புவதற்கு இங்கிலாந்திலுள்ள வியாபாரிகளிடத்தில் போதுமான சரக்குகள் இல்லாமல் போய்விட்டது. ஆகையால் அவர்கள் இவ்விடமிருந்து ஆர்டர்கள் அனுப்பிய வியாபாரிகளுக்கு, அவரவர்களுக்குவேண்டிய சரக்குகள் இன்ன இன்ன மாதத்தில்தான் கிடைக்கும் என்று ஏற்பாடு செய்துகொண்டு அந்த ஏற்பாட்டின்படி ஒப்புக்கொண்ட வியாபாரிகளுக்கு அவர்கள் சொன்னபிரகாரம் தயாராகத் தயாராகச்

சரக்குகளை அப்போதைக்கப்போது அனுப்பிக்கொண்டே இருந் தார்கள். அந்தப்பிரகாரம மார்ச்சு மாதத்தில் ஆர்டர்கொடுத்த வியாபாரிக்கு செப்டம்பர் மாதத்திய கப்பலில்தான் சாக்குகள் வரும்படியாகவிருந்தது. அஃதாவது ஆர்டர்கொடுத்த தேதியி லிருந்து 6 மாதங்கள் கழித்துத்தான் சரக்குகள்வந்தன. நமது தேசத்திலுள்ள வியாபாரிகள் ஒப்பந்தம் செய்துகொண்டுவிட்ட படியால் தங்கள் பேரால்வரும் சரக்குகளை அவர்கள் வாங்கிக் கொள்ளக்கடமைப்பட்டவர்களாகப் போய்விட்டார்கள். இவர்க ளுக்குலாபம்சம்பாதிப்பதில் இருந்தஊக்கமானது, எந்தச்சரக்கா யினும்எக்ஸ்சேஞ்சு இறக்கமாய் இருக்கும் சமயத்தில்வாங்கினால் லாபம்அடையலாம்என்றஎண்ணத்தைக்கொண்டு அவர்கள் அனுபோகமில்லாத வியாபாரத்தில் பிரவேசிக்க ஆரம்பித்துவிட் டார்கள். சொல்பமுதலைக்கொண்டுவியாபாரம்செய்யும்பலசரக்கு வியாபாரி விலையுயர்ந்ததாயுள்ள நூல் பெட்டிகளுக்கும், ஜவுளி வியாபாரியானவர் பித்தளைத் தகடுகளுக்கும், நூல் வியாபாரி யானவர் இரும்பு சாமான்களுக்கும் ஆர்டர்கள் கொடுத்துத் தாறுமாறாக வியாபாரம் செய்ய ஆரம்பித்துவிட்டார்கள். ஆர் டர் கொடுத்துப் பலநாட்கள் கழித்துச் சரக்குகள் வந்தன. சரக்குகள் இந்தத் தேசத்தில் வந்து இரங்கிய காலத்திற்குள் எக்ஸ்சேஞ்சு ஏறிப்போய் விட்டது. அதாவது மிகவும் மலி வாக விற்ற பவுன் நாணயமானது அதிக கிராக்கியாகப் போய் விட்டது. இந்தச் சமயத்தில் அவரவர்களுக்கு வந்த சரக்கு கள் சம்பந்தமாய்வந்தஉண்டிகளுக்குக்கெடுத்தேதிகளில்தொகை களைச் செலுத்தமுடியவில்லை. சரக்குகளை ஏலம் போட்டு அவைகளின் கிரயங்களை உண்டித் தொகைகளுக்கு ஈடுசெய்து கொள்ளலாமென்றால் அந்த சரக்குகளுக்குக் கிராக்கியும் இல்லை. இத்தேசத்தில் வந்து இறங்கின செலவுஉள்பட அந்தச்சரக்கு களுக்கு என்னவிலை அடங்கிற்றோ அதற்கு மிகவும் குறைந்த விலைக்கு உள்ளூரிலேயே சரக்குகள் அகப்பட்டுக்கொண்டிருந்

தன. ஆகையால் இந்த வியாபாரிகள் பெருத்த நஷ்டத்தை அடைந்து மிகவும் ஏழ்மையாகப் போய்விட்டதுமன்றி இங்கிலாந்திலுள்ள வியாபாரிகளையும் பெருத்த நஷ்டமடையும்படி செய்துவிட்டார்கள். முன்யோசனை இல்லாமல் தாறுமாறாகச் சூதாட்டம் ஆடுவதுபோல் வியாபாரம் செய்தவர்களின் குடும்பங்கள் பல மூழ்கியே போய்விட்டன. இது பவுன்நாணயம் மிகக் குறைவாக விற்றதின் காரணமேயாகும்.



## யார் பாங்குக்கு உரிய கட்சிக்காரர்கள் ஆவார்கள்.

இதுகாறும் பாங்கினால் ஜனங்களுக்கு இருக்கப்பட்ட உபயோகங்களைப்பற்றி எடுத்துரைத்தோம். பாங்கர்கள் யாரைத் தங்களுடைய கட்சிக்காரர்களாக ஏற்றுக்கொள்ளுவார்களென்றும்யாரைத்தங்களுடைய தகுந்தகட்சிக்காரர்களின்ஜாப்தாவை விட்டு நீக்கிவிடுவார்களென்றும் இப்போது யோசித்துப் பார்ப்போம். ஒருவன் ஏராளமான சொத்து உடையவனாகவிருந்த போதிலும் அவனிடம் நாணயம் சரிவர இருக்காது. ஒருவன் சாமான்ய ஸ்திதியுள்ளவனானாலும் அவன் தனதுநாணயத்தைச் சரிவரக் காப்பாற்றிக் கொள்ளுவான். பாங்கர்களுக்கு யார் நாணயத்தைச் சரிவரச் செலுத்துகிறார்களோ. அவர்கள் தாம் சரியான கட்சிக்காரர்கள் ஆவார்கள். கெடுத்தேதியில் யார் செலுத்தவேண்டிய தொகையைச் செலுத்தத் தவறுகிறார்களோ அவரைத் தங்களுடைய கட்சிக்காரராகச் சேர்க்கமாட்டார்கள். அவருக்குக் கடன் வேண்டுமானால் பாங்கிலிருந்து ஒருபோதும் வாங்கமுடியாது. பொதுவாய்ப் பெருத்த வியாபாரம் செய்யும் அனேக பங்குக்காரர்கள் சேர்ந்து முதல் வைத்திருக்கும் கம்பெனிகளாக ஏற்பட்டுள்ள ஸ்தாபனங்களுக்குப் பாங்கர்கள் நிர்பயமாய்ப் பணம் கொடுத்து ஒத்தாசை செய்வார்கள். ஏனெனில் அப்பேர்ப்பட்ட கம்பெனியின் மானேஜர்கள் அதிலுள்ள பங்குக்காரர்களெல்லோருக்கும் கணக்கு ஒப்புவிக்கக் கடமைப்பட்டவராதலால் கம்பெனிக் கணக்குகளைச் சரிவர வைத்துக் கொண்டு வருஷத்திற்கு ஒருமுறை அந்தந்த வருஷத்தில் நடந்த வரவு செலவு லாபம் இவைகளைக் காட்டக்கூடிய சங்கிரகக் கணக்குகளை (Balance sheet) ஒவ்வொரு பங்குக்காரர்களுக்கும் அனுப்பி அவர்கள் அந்தக் கணக்குகளை அங்கீ

காரம் செய்யும்பொருட்டு மீட்டிங்கு கூட்டுவார்கள். பங்குக் காரர்களும் மீட்டிங்குக்கு வந்து அவர்களுக்கு அனுப்பப்பட்ட வரவு செலவு கணக்குகளில் ஏதாவது குற்றங் குறைக ளிருக்கு மென்று அவர்களுக்குத் தோன்றினால் அவைகளை மானேஜர்க ளுக்கு எடுத்துரைத்து அது சம்மந்தமாய் மானேஜர்கள் சொல் லும் சமாதானங்கள் தங்களுக்குச் சரியல்லவென்று தோன்றி னால் அவர்களைக் கண்டித்து கம்பெனியானது சரிவர நடத்துவ தற்குவேண்டிய ஏற்பாடுகளை அப்போதைக்கப்போது செய்வார் கள். இம்மாதிரி ஒழுங்காக வைத்திருக்கும் கணக்குகளைப் பாங் கர்களும் பார்த்துக் கம்பெனியின் நடவடிக்கைகளைப் பற்றித் தெரிந்துகொள்ள அவர்களுக்குச் சமயம் நேருகிறது. கவலையில் லாமல் இக் கம்பெனிகளுக்குப் பாங்கர்கள் கொடுக்கல் வாங்கல் செய்துவரலாம். கம்பெனிகள் செய்கிற அளவே ஒரே வியாபாரி யானவர் தன் சொந்தமுதலைக்கொண்டு வியாபாரம் செய்தாலும் கம்பெனிகளுக்கு நிர்ப்பயமாய்ப் பாங்கர்கள் கடன் கொடுத்து வாங்குவதுபோல் தனித்த வியாபாரிகளுக்குக் கொடுக்க முடி யாது. ஏனெனில் தனித்த வியாபாரிகள் தங்களது கணக்கைக் கம்பெனிகளில் வைத்திருக்கிறதுபோல் அவ்வளவு ஒழுங்காய் வைத்திருக்க மாட்டார்கள். காரியஸ்தர்கள் அனேகம்பேர் இருந்தாலும் இன்ன சமயத்தில் இன்ன வேலைதான் செய்கிறது என்ற விவஸ்தை அவர்களிடம் இராது. தினந்தோறும் கடையில் கணக்கெழுதுகிற ஒரு குமாஸ்தாவைக் கிராமகாரியம் பார்த்துவரும்படி முதலாளியே அனுப்பும்படி நேரும். அந்த குமாஸ்தா திரும்பிவரும் வரையில் கடைக்கணக்குகள் எழுதப் படாமலே இருக்கும். ஒழுங்காகக் கணக்குகள் எழுதப்படு மென்றபோதிலும் பலநாள் கணக்குகளைச் சிலநாளைக்குள் இரவு பகல் பாராமல் கடைக் குமாஸ்தாக்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து எழுதுவது நமது வியாபாரிகளுக்குள் சகஜமாக ஏற்

பட்டுள்ளது? வருமான வரி உத்தியோகஸ்தர் (Incometax officer) ஒரு வியாபாரிக்கு வருமானவரி போடுவதற்காக அவருடைய கணக்குப் புஸ்தகங்களைத் தம்முடைய ஆபீசில் தாகல் செய்யவேண்டுமென்று உத்தரவு செய்தால் அப்போது தான் அந்த வியாபாரி கணக்குகளைத் துரிதமாய் எழுதிமுடிக்க எத்தனிப்பார்.

வருமானவரி உத்தியோகஸ்தர் செய்த உத்தரவுகளுக்கு வியாபாரிகள் தங்களது கணக்குகள் எழுதியாகவில்லையென்றும், கடைக் குமாஸ்தாக்கள் நிலுவை வசூலுக்குப்போய் இன்னும் திரும்பிவரவில்லை என்றும் கணக்குப் புஸ்தகங்கள்கோர்ட்டில் தாக்கல் செய்யப்பட்டிருக்கின்றனவென்றும் அதுகாரணம்பற்றிக் கணக்குகள் எழுதுவதற்கு இவ்வளவுநாள் தவணைவேண்டுமென்றும், அந்த உத்தியோகஸ்தருக்கு மனுச்செய்து கொள்ளுகிறவிஷயம் எல்லோருக்கும்தெரிந்திருக்கும். அப்படிக் கணக்குகள் அப்போதைக்கப்போது எழுதாதிருக்கும்போது வியாபாரி தனக்கு இன்னலாபம் வரும், அல்லது நஷ்டமானால் இவ்வளவு நஷ்டம்வருமென்றுதெரிந்துகொள்ளமுடியாது. வியாபாரிகளில் சிலர் தம்முடைய வியாபாரங்களையே கவனியாமல்தங்களுடைய குமாஸ்தாக்கள் வைத்தது சட்டமாகச் சில விடங்களில் இருப்பது நமக்குத் தெரிந்தவிஷயம். இந்தமாதிரி வியாபாரம் செய்கிறவர்களுக்குப் பணம் கொடுப்பதானால் பாங்கர்கள் எவ்வளவு ஜாக்கிரதையாய் இருக்கவேண்டுமென்று யோசித்துப்பாருங்கள். அவர்களுடைய ஸ்திதியைப்பற்றி மிக நெருக்கமாய்ப் பழகிக் கொண்டு தெரிந்துகொள்ளவேண்டும். அம்மாதிரி வியாபாரிகள் ஊரில் மிகவும் செல்வாக்காக விருப்பார்கள். போனவிடங்களில் அவர்களுக்கு மரியாதை மிகவும் அதிகமாகவே இருக்கும். பரம்பரைப் பெரியமனுஷியர்களாகவும் இருப்பார்கள். பிறரை மோசம்

செய்யவேண்டுமென்று சொப்பனத்தில்கூட நினையார். ஆனால் அவர்களுடைய அஜாக்கிரதையால் அவர்களுக்கு எதிர்பாராத கஷ்டங்களுண்டாகின்றன. காரியஸ்தர்களின் சொல்லைக் கேட்டுக்கொண்டு கடன் கொடுக்கிற பொதுஸ்தாபனங்களோ, அல்லது பெருத்த தவணைக் கடைக்காரர்களோ எல்லாரிடமும் ஏக காலத்தில் கடன் வாங்கிவிடுவார்கள். ஒரே சமயத்தில் பல பாங்கிகளில் கடன் வாங்கிவிட்டால் எல்லாக் கடன்களையும் திருப்பிக்கொடுக்கும் கெடுத்தேதியும் ஏககாலத்தில் வந்துவிடும். வாங்கின கடன்தொகைகளை வியாபாரத்தில் மாத்திரம் உபயோகப்படுத்தியிருந்தாலாவது கெடுத்தேதிகளில் கொஞ்சம் சிரமப்பட்டாவது வாங்கின தொகைகளைச் செலுத்திவிடலாம். பாங்கிகளில் கடனைவாங்கி வீடுகள் கட்டுவதிலும், நிலம் வாங்குவதிலும், உயர்ந்த நகைகள் செய்வதிலும் தங்களுடைய யோக்கியதைக்கும் கௌரவத்திற்கும் தகுந்தவாறு ஏராளமானபணத்தைச் செலவிட்டு அதிவிமர்சையாய் கலியாணங்களை நடத்துவதிலும் அவர்கள் வாங்கின கடன் தொகைகளைச் சுலபமாய்த் திருப்பிக்கொடுக்க வழி ஏற்படாமல் போய்விடுகிறது. பாங்கர்களுக்குக் கெடுத்தேதியில் தொகை செலுத்தத் தவறினால் இவர்களின் நாணயம் மிகக் குறைந்துவிடும். பாங்கர்களிடம் நாணயம் தப்பிவிட்ட செய்தி பிறருக்குத் தெரிந்துவிட்டால் இவர்கள் கௌரவத்திற்குக் கேடுவந்துவிடும். பல விடங்களிலிருந்து ஏக காலத்தில் கடன் திருப்பிக் கொடுக்கவேண்டுமென்று நோட்டீஸ்கள் வந்தால் அதன்பிரகாரம் பணத்தைத் திருப்பிக்கொடுக்க முடியாது. கடன்கொடுத்தவர்கள் தங்களது பணத்திற்காக இந்த வியாபாரிகளை நெருக்கினால் நாணயத்தைக் காப்பாற்றும்பொருட்டுத் தாங்கள் கட்டின வீட்டையோ, வாங்கின நிலத்தையோ, தாங்கள் செய்த நகைகளையோ விற்றாவது பணத்தைக் கடன்காரருக்குக் கொடுத்துவிடும்படி நேரும். ஒரு முடைக்காக விற்

கப்பட்ட சொத்தானது நியாயமான விலைக்குப் போகாது என்பது எல்லோருக்கும் அநுபோகத்தினால் தெரிந்திருக்கும். ஆகையால் தாங்கள் வாங்கின விலையில் படிபாதிக்குத்தான் இந்த வியாபாரிகள் தங்களதுமுடைக்காக விற்கிற சொத்துக்களை விற்கும்படியாகும். இதனால் இந்த வியாபாரிகளுக்குமிகுந்த நஷ்டம் உண்டாகும். முன் யோசனைசெய்யாமல் வியாபாரஞ்செய்துவருகிறவர்களுடைய கதி இவ்வாறேயாகும். இம்மாதிரியான வியாபாரிகளுக்குக் கொடுக்கும் கடன் தொகைகளும் சரிவர வசூலாகாமல் பாங்கர்களுக்கும் நஷ்டங்கள் ஏற்படும். ஆகையால் பல பேர்வழிகளின் பணங்களுக்கு ஜவாப்தாரிகளாக விருக்கிற பாங்கர்கள் தங்களிடமுள்ளதொகைகளை எவ்வளவு ஜாக்கிரதையாகக் கொடுத்து வாங்கவேண்டுமென்பதையும், அவர்களுக்கு இருக்கிற கஷ்டங்கள் எவ்வளவென்பதையும் ஆலோசியுங்கள். வியாபாரிகள் முன்யோசனையுள்ளவர்களாகவும், தங்களதுயோக்கியதைக்குட்பட்டுக் கடன் வாங்கிக்கொண்டும், வாங்கின கடன் தொகைகளை லாபகரமான வியாபாரத்திற்கு உபயோகித்துக் கொண்டும், கெடுக்கெடுதிகளில் பணத்தைத் திருப்பிக் கொடுத்துக்கொண்டும், தங்களுடைய வியாபாரநிலைமையை அப்போதைக்கப்போது சரியாகத் தெரிந்துகொண்டும், தங்களுக்குப் புலப்படும் குறைகளையும் பிசகுகளையும் அவ்வப்போது சீர்திருத்தம் செய்துகொண்டும் இருந்தால், தங்களுடைய வியாபாரத்திற்கு ஒருபோதும் கேடுவராது. பாங்கர்களும் அம்மாதிரியான வியாபாரிகளிடம் கவலையில்லாமல் வரவு செலவு செய்யலாம். பாங்கர்களின் ஒத்தாசையைக் கொண்டு கொஞ்சம் கொஞ்சமாய் வியாபாரத்தையும் அபிவிருத்தி செய்யலாம். இம்மாதிரி எல்லா வியாபாரிகளும் ஜாக்கிரதையாக விருந்தால் நமது நாட்டின் வியாபாரமும் பன்மடங்கு அபிவிருத்தியாகும்.

# பாங்கர்களின் நிலைமையை டிப்பாசிட்டர்கள் எப்படி அறிவது?

பாங்கர்கள் தாங்கள் கொடுக்கும் தொகைகளைத் தகுந்த நாணயமுள்ளவர்களுக்கும் ஜாமீன்தாரருக்கும் கொடுக்கிறார்களென்று சொன்னோம். ஒரு பெருத்த முதலாளி தன்னுடைய பணத்தைப் பாங்கியில் டிபாசிட்டு செய்யவேண்டுமானால் தான் டிபாசிட்டு செய்யுமுன் பாங்கினுடைய சரியான நிலைமையைப் பற்றி எப்படித் தெரிந்துகொள்ளுகிறது? தங்களிடம் செலுத்தும் டிபாசிட்டுகளுக்குப் பாங்கர்கள் எவ்வித ஜாமீன் கொடுக்கிறார்கள்? இந்த விஷயத்தைப்பற்றி யோசித்துப் பார்ப்போம். டிபாசிட்டுகளுக்குப் பாங்கர்கள் நேராகவொருவிதஜாமீனும் கொடுக்கிறதில்லை. பாங்குக்கு அதன் பங்குக்காரர்கள்தான் முதலாளிகள் என்று சொல்லியிருக்கிறோம். அந்த முதலாளிகள் எவ்வளவு பங்குகளுக்குக் கையொப்பமிட்டுப் பாங்கில் பங்குகள் எடுத்துக்கொண்டிருக்கிறார்களோ அவ்வளவு பங்குத் தொகைகளின் மொத்தப் பணமானது டிபாசிட்டர்களின் தொகைகளுக்கு ஜாமீனாகும். ஒரு பாங்கில் பங்கு ஒன்றுக்கு ரூ. 100 உள்ள 10000 பங்குகள் சேர்க்கப்பட்டிருக்கின்றனவென்றால் அந்தப்பாங்கின் பங்குக்காரர்கள் பத்து லக்ஷம் ரூபாய்க்கு டிபாசிட்டர்களுக்குஜவாப்தாரியாக விருக்கிறார்களென்றுஅறியலாம். எவ்வளவு பங்குகள் ஜனங்களால் எடுத்துக்கொள்ளப் படுகின்றனவோ, அவ்வளவு பங்குத்தொகைகளுக்கும் பாங்கின் டிபாசிட்டர்கள் முதல் பாத்தியஸ்தர்கள் ஆவார்கள். பங்குத்தொகை முழுவதையும் பாங்கர்கள் பங்குக்காரர்களிடம் வசூல்செய்து டிபாசிட்டுத் தொகைகளையும், பங்குக்காரர்களிடம் வசூல் செய்யப்பட்ட முழுப்பங்குத்தொகைகளையும் வெளியில் கடன்கொடுத்துப் பாங்கர்களுக்கு ஏராளமான நஷ்டம் ஏற்பட்டுவிட்டால்

டிபாசிட்டர்களுக்குத்தாங்கள் கொடுத்த பணங்களில் பெரும் பான்மை நஷ்டம் வந்துவிடும். ஆகையால் பெரும்பான்மையாய் பாங்கர்கள் பங்குத்தொகை எவ்வளவு உண்டோ அந்த முழுத் தொகையையும் பங்குக்காரர்களிடமிருந்து வசூல்செய்யமாட்டார்கள். அனேகமாய்ப் பாதிக்கு மேற்பட்டு வசூல் செய்யமாட்டார்கள். ஒருபாங்குக்கு பத்துலட்சம் ரூபாய் மூலதனம் என்று ஏற்பட்டு அந்தப்பத்துலட்சம் ரூபாயையும் பங்கு ஒன்றுக்கு நூறு ரூபாய்அடங்கிய பதினாயிரம் பங்குகளாகவெளியில் கொடுப்பதாகப்பகுத்திருந்தால் பாங்கர்கள்ஒரு பங்குக்கு ரூ. 50 வீதம்தான் வசூல்செய்து பாக்கியாகவிருக்கும் ரூ. 50ஐயும்பங்குக்காரரிடம் நிறுத்தி வைப்பார்கள். பங்குக்காரர்கள் தங்களிடம் நிறுத்திவைக்கப்பட்டிருக்கும் ரூ. 50ஐயும்எந்தநிமிஷத்தில் கேட்கிறார்களோ அப்போது கொடுக்கக் கடமைப்பட்டவர்கள். பங்குக்காரர்களிடம் நிறுத்திவைக்கப்பட்டிருக்கும் ரூபா 50ம் பாங்கர்களின் முதலாகவே பாவிக்கப்படும். அந்தத் தொகை பங்குக்காரரிடம் நிறுத்திவைக்கப்பட்ட உத்தரவாதப்பணம் (Reserve liability of the Shareholders) என்று சொல்லப்படும். அவைகளைப் பாங்கர்களால் வட்டியில்லாமல் கொடுத்துவைக்கப்பட்ட பணம் என்று எண்ணிக்கொள்ளலாம். * இதைத்தவிர ஒவ்வொரு வருஷத்திலும் நிகரலாபத்தில் ஒருபாகம் க்ஷேமநிதியாகப் பாங்கர்கள் வைத்துவிடுவார்கள். டிபாசிட்டர்களுக்குப் பாங்கர்களால் மேற்கூறியபடி பங்குக்காரர்களிடம் நிறுத்திவைக்கப்பட்ட பணமும் க்ஷேமநிதியில் சேர்ந்த பணமும் தாங்கள் டிபாசிட்டாகப்போடப்பட்ட தொகைகளுக்கு ஜாமீனாக ஆகின்றன. எவ்வளவுக் கெவ்வளவு பங்குக்காரரிடம் நிறுத்திவைக்கப்பட்டிருக்கும் தொகையும், க்ஷேம நிதியும் அதிகப்படுகிறதோ அவ்வளவுக் கவ்வளவு டிபாசிட்டுகளும் அதிகமாகும். டிபாசிட்டுகள் அதி

* இதைக் காலாவதி (Limitation) என்ற சட்டம் கட்டுப்படுத்தாது.

கமானால் பாங்கின் வேலை விரிவாக நடப்பதற்கு இடமுண்டு. முக்கியமான வியாபாரஸ்தலங்களில் கிளைகளை (Eranches) ஸ்தாபனம் செய்து ஆங்காங்குள்ள வியாபாரிகளுக்கு ஒத்தாசையாகவும் தங்களுடைய பங்குக்காரர்களுக்கு லாபகரமாகவும் இருக்கச்செய்யலாம்.

மேற்கூறியவை தவிர பாங்கர்கள் தங்கள் பாங்கின் யோக்யதையைத் தெளிவாக எல்லோரும் தெரிந்துகொள்ளும்பொருட்டு ஒருவருஷத்திற்கொருமுறையோ, அல்லது ஆறுமாதத்திற்கொருமுறையோ தங்களது கணக்குகளை சங்கிரகமாகவும் தெளிவாகவும் தயார்செய்து அவைகளை அச்சிட்டுப் பங்குக்காரர்களுக்கும் மற்றுமுள்ள டிபாசிட்டர்களுக்கும் அனுப்புவார்கள். அந்தக் கணக்கானது இரண்டு பாகமாகப் பிரிக்கப்பட்டிருக்கும். அதாவது பலவித கணக்குகளிலும் ஜனங்களால் போடப்பட்ட தொகைகள் பாங்குக்குச் சேர்ந்திருக்கும் க்ஷேமநிதி, நிகரலாபம் இவைகளெல்லாம் ஒருபாகத்திலும், பாங்கிலிருந்து கடனாக வெளியில் கொடுக்கப்பட்டிருக்கும் தொகைகள் பாங்கின் கட்டிடத்திற்கும் மற்றுமுள்ள சாமான்களுக்கும் உண்டான கிரயங்கள் இவைகளல்லாத வேறுவிதத்தில் பாங்கர்களால் செலவிட்டிருக்கும் தொகைகள் மற்றொருபாகத்திலும் தெளிவாகக் காணப்பட்டிருக்கும். முன்யோசனையுள்ள ஒவ்வொருவரும் இந்தக்கணக்குகளை மிகவும் ஜாக்கிரதையாக வைத்துக்கொண்டு முன்வருஷத்தைவிட அடுத்த வருஷம் எந்த எந்த இனத்தில் விருத்தியடைந்திருக்கிறதென்றும், எந்த எந்த அம்சங்களில் குறைவு அடைந்திருக்கிறதென்றும் தெரிந்துகொள்ளலாம். ஒவ்வொரு வருஷத்திய சங்கிரகக் கணக்கும் பங்குக்காரர்களுக்கு அனுப்பப்பட்டு அவர்கள் அந்தக் கணக்குகளை அங்கீகாரம் செய்யும்பொருட்டு பங்குக்காரர்களின் மீட்டிங்கு

ஒவ்வொரு வருஷமும் கூட்டப்படுவதால், அந்த மீட்டிங்குக்கு எல்லாப் பங்குக்காரர்களும் வந்து அவர்களுக்கு ஏற்படும் சந்தேகங்களை அந்த மீட்டிங்கில் தெரியப்படுத்தி நிவர்த்தி செய்து கொள்ளலாம். அதில் ஏதாவது பிசகுகள் இருந்தால் அவைகளை எடுத்துச்சொல்லி அப்போதைக்கப்போது அந்தப் பிசகுகளைத் திருத்த ஏற்பாடு செய்யலாம். ஒவ்வொரு வாரமும் பாங்கர்கள் சங்கிரகக் கணக்குத் தயார்செய்துகொண்டு ஒவ்வொரு அம்சங்களிலும் உள்ள நிலைமையை அதன் மூலமாய் கவனித்துக் கொண்டும் அப்போதைக்கப்போது சீர்திருத்தம் செய்யவேண்டிய விஷயங்களை நன்றாக கவனித்துச் சீர்திருத்தம் செய்துகொண்டு வருவார்கள்.

பங்குக்காரர்களுக்கும் மற்றுமுள்ளவர்களுக்கும் கணக்குகள் அனுப்புவதற்கு முந்தி அவைகள் துரைத்தனத்தாரால் அங்கீகரிக்கப்பட்ட ஆடிட்டர்களால் பரிசீலனை செய்யப்பட்டு அவருடைய சர்ட்டிபிகேட்டையும் அந்தக் கணக்குகளுடன் சேர்த்துத்தான் பாங்கர்கள் அனுப்புவார்கள். மேற்படி ஆடிட்டர்கள் ஒவ்வொரு வருஷமும் பங்குக்காரர்களாலேயேதான் நியமிக்கப்படுவார்கள். தங்களால் நியமிக்கப்பட்ட ஆடிட்டர்களின் சர்ட்டிபிகேட்டுடன் பாங்கின் கணக்குகள் அனுப்பப்படுவதனால் பங்குக்காரர்களுக்கு அந்தக் கணக்குகளில் நம்பிக்கை ஏற்படுகிறது.



# யூனியன் பாங்க், லிமிடெட், கும்பகோணம்.

1925வது மார்ச்சுமீ 31உ யோடு முடிவாகிற கால் வருஷத்திய [illegible]

| | | Rs. | A. | P. | | | Rs. | A. | P. |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | பாங்குக்கு சொந்தமான கட்டடங்களின் கிரயம் | 1627 | 9 | 5 | 9 | சர்க்கார் பத்திரத்தின் கிரயம் ஈடுசெய்யபண்டு | 5000 | 0 | 0 |
| | பாங்கு ஆபீஸ் கட்டடத்தின் கிரயம் ... | 16461 | 3 | 10 | | கும்பகோணம் இம்பீரியல் பாங்கியில் வாங்கியிருக்கும் அதிக பத்து | 44884 | 7 | 11 |
| 6 | இதரபாங்குகளின் செக்குகள் முதலியன ... | 3000 | 0 | 0 | | | | | |
| 7 | சர்க்கார்பத்திரங்கள் ... | 150004 | 13 | 6 | | | | | |
| | டிவட்டி ... | 823 | 0 | 5 | | | | | |
| 8 | கையில் இருக்கும் ரொக்கமும், ஸ்டாம்புகளும், இதர பாங்குகளில் நடைமுதலில் இருக்கும் தொகைகளும் ... | 60040 | 4 | 4 | | | | | |
| | ஆக மொத்தம் ... | 774066 | 11 | 11 | | ஆக மொத்தம் ... | 774066 | 11 | 11 |

## பாங்கர்கள் எவ்விதம் தங்கள் ஸ்திதியைத் தெரிந்துக் கொள்கிறார்கள்.

## How do Bankers ascertain their financial Position then & there.

பாங்கர்கள் அப்போதைக் கப்போது தங்கள் நிலைமையைத் தெரிந்துகொள்ளும் பொருட்டு ஒவ்வொருவார முடிவிலும் சங்கிரகக் கணக்குப் போட்டுக்கொண்டு, அதில் கண்டிருக்கும் ஒவ்வொரு இனத்திலும் முந்தினவாரத்தை விட அடுத்த வாரத்தில் விருத்தியாம்ச மடைந்திருக்கிறதா, அல்லது அதே நிலைமையில் இருக்கிறதா, அல்லது குறைவுபட் டிருக்கிறதா வென்று பார்த்துக்கொண்டே இருந்து, எந்த எந்த இனத்தில் குறைவாக விருக்கிறது என்றும் அவைகளை எவ்விதமாக விருத்திக்குக் கொண்டுவரலாமென்றும் யோசித்து வேண்டியதை அப்போதைக் கப்போது செய்துகொண்டே இருப்பார்கள். பொது ஜனங்கள் எல்லோரும் தெரிந்துகொள்ளும் பொருட்டு ஒவ்வொரு வாரத்திய சங்கிரகக் கணக்குகளையும் தினசரிப் பத்திரிகைகளிலோ, அல்லது வியாபாரசம்பந்தமாயுள்ள முக்கிய பத்திரிகைகளிலோ பிரசுரம் செய்துகொண்டிருப்பார்கள்.

§ உதாரணமாக, இங்கு காணப்படும் ஓர் பாங்கின் சங்கிரகக் கணக்கை எடுத்துக்கொண்டு அதில் என்ன என்ன இனங்கள் காணப்பட் டிருக்கிறதென்றும் பாங்கினுடைய ஸ்திதி அதனால் எப்படித் தெரிந்துகொள்ளலாமென்றும் பார்ப்போம்:-

---

§ பங்குக்காரர்களுக்கும், மற்றுமுள்ள டிபாசிட்டர்களுக்கும் அனுப்பப்படும் வருஷாந்திரக் கணக்கானது இப்போது சொல்லப்போகிற கணக்கிலிருந்து தயார் செய்கிறபடியால், இதை விபரமாய்ச் சொல்வதானது வருஷாந்திரக் கணக்குக்கும் ஒத்திருக்கும்.

வருஷத்திற்கொருமுறையோ, அல்லது ஆறு மாதத்திற்கொருமுறையோ, அந்தந்த பாங்கின் விதிகளுக்குத் தக்கவாறு, பங்குக்காரர்களுக்கும், மற்றுமுள்ள டிபாசிட்டர்களுக்கும் பாங்கர்களால் அனுப்பப்படும் சங்கிரகக்கணக்கானது (Balance Sheet) இரண்டு பாகங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது என்று ஏற்கனவே சொல்லப்பட்டிருக்கிறது. அதேமாதிரிதான் பாங்கர்கள் தாங்கள் ஒவ்வொரு வாரத்திலும் போட்டுக்கொண்டிருக்கும் சங்கிரகக் கணக்கும் இருக்கும். அதாவது பாங்கர்களின் சொத்து முதலியன ஒருபக்கத்திலும், கடன் வகையறா மற்றொரு பக்கத்திலும் காணப்பட்டிருக்கும். இங்கு அச்சிட்டிருக்கும் சங்கிரகக் கணக்கில் காணப்படும் ஒவ்வொரு இனத்தையும் விவரமாக அடியில் எடுத்துரைத்திருக்கிறதை கவனித்தால், பாங்கர்கள் அந்தக் கணக்கினால் தங்களுடைய ஸ்திதியை எப்படித் தெரிந்துகொள்ளுகிறார்களென்றும், பாங்கின் நடவடிக்கைகளை அவர்களால் எவ்விதமாக விருத்தியாம்சத்திற்குக் கொண்டுவரப் படுகிறதென்றும் நன்கு விளங்கும். இங்கு காணப்படும் கணக்கில் பாங்கின் கடன்கள் வகையறா வலது பக்கத்திலும், சொத்து முதலியன இடது பக்கத்திலும் இருக்கிறது காண்க. முதலில் வலதுபாகத்தில் காணப்பட்டிருக்கும் ஒவ்வொரு இனத்தையும்பற்றி இங்கு கூறுவோம். அதன் தலைப்பில் கடன்கள் வகையறா என்று காணப்பட்டிருக்கிறது. பாங்கர்கள் பிறரிடத்தில் வாங்கிய பணத்தைத்தான் வெளியில் கடனாகக் கொடுக்கிறார்களாகையால், அவர்களின்முதல் வேலையானது பிறரிடத்தில் பணம் வாங்குவதுதான். ஆகையால்தான் அவைகளைப்பற்றி இங்கு முதலில் கூறப்பட்டிருக்கிறது.

அதில் காணப்படும் முதல் இனமானது, பாங்கின் முதல் தொகை என்று இருக்கிறது. இந்த முதல் தொகையானது பாங்கைச் சேர்ந்ததாகவிருந்தாலும், இந்தத் தொகையைப்

பங்குக்காரர்கள் பாங்கிலிருந்து திருப்பிவாங்க அதிகாரமில்லை என்றாலும், பங்குக்காரர்களுக்கு பாங்கர்கள் அந்தத் தொகைகளுக்கு ஜவாப்தாரிகளானதாலும், பங்குக்காரர்களால் செலுத்தப்பட்டிருக்கும் தொகைகளுக்கு லாபத்தை விதித்துக்கொடுக்க பாங்கர்கள் கடமைப்பட்டவர்களாதலாலும், இந்தப் பங்குத் தொகையானது பாங்கர்களால் பங்குக்காரர்களிடம் வாங்கப்பட்ட கடன் என்று பாவிக்கப்பட்டிருக்கிறது. முதல்தொகை இரண்டுலக்ஷம் ரூபா என்று சொல்லப்பட்டு, அந்தத் தொகையில் வசூலாயிருக்கும் தொகை ஒருலக்ஷம் ரூபா என்றுகாணப்பட்டிருக்கிறது. இதனால் பாங்கர்கள் ஒருலக்ஷம் ரூபாவை பங்குக்காரரிடம் நிறுத்திவைத்திருக்கிறார்களென்று காணலாம். (அம்மாதிரி நிறுத்திவைத்திருப்பதற்குக் காரணம் 45-ம் பக்கத்தில் விவரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.)

இரண்டாவது இனத்தில் பாங்கின் சேஷநிதி இவ்வளவென்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்தத்தொகை ரூ. 90,000 என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதனால் ஜனங்கள் பாங்கின் ஸ்திதியை நன்கு தெரிந்துகொள்ளலாம். அதாவது ஒருலக்ஷம் ரூபா வசூலாகப்பட்ட பங்குக்கு ரூ. 90,000 சேஷநிதியும், பங்குக்காரர்களிடம் நிறுத்திவைத்திருக்கும் தொகை லக்ஷம் ரூபாயும் இருந்தால் பாங்கின் ஸ்திதி மிகவும் திருப்திகரமாகவிருக்கிறதென்று தெரிந்துகொள்ளலாம்.

அதற்கடுத்த இனமானது டிபாசிட்டுகள். ஏற்கனவே சொல்லியபடி, நிர்ணயத் தவணை டிபாசிட்டுகள், சேவிங்ஸ் பாங்க் டிபாசிட்டுகள், நடைமுதல் டிபாசிட்டுகள் முதலிய எல்லா டிபாசிட்டுகளும் மேற்கூறிய பாங்கியில் வாங்கப்பட்டிருக்கிறது. சற்றேறக்குறைய இந்த பாங்குக்கு ஐந்துலக்ஷம் ரூபா டிபாசிட்டுகளில் இருக்கிறது காணலாம். பாங்கர்கள்

ஒவ்வொரு வாரமும் இந்த டிபாசிட்டுகளின் தொகை எவ்வித மாகவிருக்கிறது என்று பார்த்துக்கொண்டும், அவைகளில் எதிலாவது முன் இருந்ததைவிட மிகக் குறைவடைந்திருந்தால், அதன் காரணமென்னவாக இருக்குமென்று யோசித்து அதை மீண்டும் பழய ஸ்திதிக்குக் கொண்டுவருவதற்கு என்ன ஏற்பாடு செய்யலாமென்றும் பார்த்து, அதற்கு வேண்டியதை உடனே செய்ய ஆரம்பிப்பார்கள். அதன்பிறகு சிப்பந்திகளால் கட்டப்பட்டிருக்கும் ஜாமீன்தொகைகளும் (Security Deposits) சிப்பந்திகளின் சௌகரியத்திற்காக ஏற்படுத்தியிருக்கிற பிராவிடெண்டு டிபாசிட்டுத் தொகைகளும் (Provident Fund Deposits for the benefit of the Employees) தெரிவித்திருக்கிறார்கள். பாங்கர்கள் வட்டிக்குப் பொது ஜனங்களிடம் வாங்கியிருக்கும் டிபாசிட்டுகளும், சிப்பந்திகளால் ஜாமீனாகக் கட்டப்பட்டிருக்கும் தொகைகளும் பிரத்தியேகமாக இந்தக் கணக்கில் காணப்பட்டிருக்கிறது §

அதற்கடுத்த இனம் நிலுவைச் சேதாரம் என்றிருக்கிறது. இதனால் பொது ஜனங்களுக்கு இந்த பாங்கில் க்ஷேமநிதி ரூ. 90,000 இருப்பதைத்தவிர, நிலுவைச் சேதாரத்திற்காக ரூ. 20,000 இருக்கிறதைத் தெரிந்துகொண்டு, பாங்கின் ஸ்திதியைப்பற்றி அதிக நம்பிக்கை யுண்டாகிறது. ஒவ்வொரு வரு

---

§நூதனமாக இப்போது ஏற்படும் சில ஸ்தாபனங்களில் ஏராளமான சிப்பந்திகள் வேண்டுமென்றும், ஒவ்வொரு சிப்பந்தியும் இவ்வளவு ரூபா ஜாமீன் கட்டவேண்டுமென்றும் தினசரிப் பத்திரிகைகளில் பிரசுரஞ்செய்து, அந்தச் சிப்பந்திகளால் கட்டப்பட்ட ஜாமீன்தொகைகளைக்கொண்டு வியாபாரம் செய்பவர்களையும் அந்த ஜாமீன்தொகைகளை துர்விநியோகப்படுத்தி சிப்பந்திகளை ஏமாற்றிவிடுபவர்களையும் பற்றி நாம் அடிக்கடி கேள்விப்பட்டிருக்கிறோம்.

ஷத்திய நிகர லாபத்திலிருந்து க்ஷேமநிதிக்கு ஒருபாகம் சேர்த்துக்கொண்டு வருவதுபோலவே, இந்த நிலுவைச்சேதார பண்டுக்கும் ஒவ்வொரு வருஷமும் சொல்ப தொகை சேர்த்துக்கொண்டே வரப்படும். ஒவ்வொரு வருஷமுடிவிலும் நிலுவை ஜாப்தாவை நன்றாகக் கவனித்துப் பார்த்து தங்களுக்கு வர வேண்டிய நிலுவைகளில் இன்னின்ன இனம் வசூலாகாமல் போய்விடும் என்று நிஷ்கரிஷை செய்துகொண்டு அந்தத் தொகையை இந்த நிலுவைச் சேதார பண்டிலிருந்து கழித்து விடுவார்கள். ஒவ்வொரு வருஷமும் இப்படி வசூலாகாமல் போகும் தொகைகளை அப்போதைக்கப்போது சிறுகச்சிறுகக் கழித்துக்கொண்டேவருகிறபடியால், பாங்கர்களுக்கு அதிகத் தொந்திரவு உண்டாகாது.

5-வது இனத்தில் வசூலுக்கு அனுப்பப்பட்டிருக்கும் உண்டியல்களின் தொகை இவ்வளவென்று சொல்லப்பட்டிருக்கிறது. 14-வது பக்கத்தில் பாங்கர்கள் தங்களுடைய கட்சிக்காரர்களுக்காகப் பணம் வசூல் செய்கிறார்களென்று சொன்னபடி இங்கு காணப்பட்டிருக்கும் தொகையானது பாங்கர்கள் வசூல்செய்யவேண்டியவைகளைக் குறிப்பிடுகிறது.

அதற்கு அடுத்த இனம் சில்லரைச் செலவுகள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதிற்கண்டிருக்கும் தொகை பாங்கர்கள் செலவிடவேண்டியஇனங்களை அனுமதித்துக்கணக்காக வைத்திருக்கிறது. அதாவது, வருமானவரி செலுத்தவேண்டியதற்காக உள்ள தொகை இவ்வளவு என்று பாங்கர்களே தங்கள் வருஷாந்திரக் கணக்குகள்முடித்து லாபம் இவ்வளவு என்று தெரிந்துகொண்டு அந்த லாபத்தில் தாங்கள் சட்டப்படி எவ்வளவு வருமானவரி செலுத்தும்படியாக விருக்கும் என்றுகணக்குப்பார்த்துச் செலுத்தவேண்டியதாக ஏற்படும் தொகையை

அனுமத்தாக வைத்திருப்பார்கள். வருமானவரி உத்தியோகஸ்தர்கள் பாங்கின் கணக்கைப் பரிசோதித்துப் பார்த்து அவர்கள் இவ்வளவு தொகை வரி செலுத்தவேண்டுமென்று உத்திரவு அனுப்பியவுடன் இந்தக் கணக்கில் ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கும்தொகையைக்கொண்டு செலுத்துவார்கள். சென்ற வருஷத்திய லாபத்தில் செலவாகக் கழிக்கப்பட்டு, அப்படிச் செலவாகக்காட்டியதொகை செலவாகாமலிருப்பதால் அந்தத் தொகையைத் தனியே ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கிறது. இந்தக் கணக்கில் மேற்சொல்லியபடி செலுத்தாமலிருக்கும் முனிசிபல் வரிகளும், கொடுபடாமலிருக்கும் சிப்பந்திகள் சம்பளங்களும் சேர்ந்திருக்கும்.

6-வது இனமானது லாப நஷ்டக்கணக்கு என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது ஒவ்வொரு வருஷத்திய லாபத்தையும் இந்தக் கணக்கில் கொண்டுவந்து, பிறகு இதிலிருந்து பங்குக்காரர்களுக்கு டிவிடெண்டு, க்ஷேமநிதி, நிலுவைச்சேதார பண்டு முதலிய கணக்குகளுக்கு ஒவ்வொரு வருஷத்திலும் கூடுகிற பங்குக்காரர்கள் மீட்டிங்கில் தீர்மானம் செய்கிறபடி மாற்றுவார்கள். அப்படி மாற்றினபிறகு மிகுதியாகவிருக்கும் தொகை இப்போது இந்த இனத்தில் காணப்படுகிறது.

அதற்கடுத்த இனம் அப்போதைக்கப்போது வருகிற வரும்படியைக் காட்டுகிறது. அதில்கண்ட எல்லா இனங்களும் பாங்கின் வரும்படியானபோதிலும், இன்னின்ன இனங்களில் இவ்வளவிவ்வளவு வரும்படி வந்திருக்கிறதென்று தெரியவேண்டியதற்காக வெவ்வேறு பெயரால் கூறப்பட்டிருக்கிறது. இதில் முதல் இனத்தில் கண்டிருக்கும் வட்டி என்பதானது, பாங்கர்களால் வெளியில் கடனாகக் கொடுக்கப்பட்டிருக்கும் தொகைகளுக்கு அப்போதைக்கப்போது கெடுத்தேதிகளில் அவரவர்கள்

கணக்குகளில் பத்தெழுதும் வட்டித்தொகையைக் குறிப்பிடுகி றது. ஒவ்வொரு கடன் தொகையும் திருப்பிக்கொடுக்கவேண் டிய கெடுத்தேதியில், கடன் கொடுத்த தேதிமுதல் கெடுத்தேதி வரையிலுள்ள வட்டித்தொகையை கடன்காரர்களின் கணக்கில் பத்தெழுதி, 'வட்டி' என்னும் இனத்தில் வரவுவைத்துவிடுவார் கள். கெடுத்தேதிக்கு முன்னமேயே கடன் தொகை திருப்பிக் கொடுக்கப்பட்டுவிட்டால், அப்படித் திருப்பிக் கொடுக்கும் தேதிவரையில் உள்ள வட்டித்தொகையை பத்தெழுதி 'வட்டி' என்ற கணக்கில் வரவு வைத்துவிடுவார்கள். அப்படி வரவு வைத்த தொகையைத்தான் இந்த இனம்குறிப்பிடுகிறது.

இரண்டாவது இனத்தில் இருக்கும் 'கமிஷன்' என்பதா னது, பாங்கர்களால் இதர பாங்கர்களின் செக்குகளுக்குப் பணம் கொடுத்து அதனால் தங்களுக்குக் கிடைக்கும் தரகும், இன்னும் பாங்கின் விதிப்படி இதர இனங்களில் வாங்கும் சில் லரைத் தொகைகளையும் குறிப்பிடுகிறது.

'டிஸ்கவுண்ட்' என்பதானது, 18-வது பக்கத்தில்சொல் லியபடி வியாபாரிகளால் கொடுக்கப்படும் உண்டியல்களுக்குத் தொகை செலுத்தி, அது சம்பந்தமாய் வசூல்செய்யும் தொகை களைக் குறிப்பிடுகிறது.

அதற்கடுத்த இனமானது சர்க்கார் பத்திரம் விஷயமாயுள் ளது. பாங்கர்கள் ரொக்க ரூபாய் கொடுத்து வாங்கியிருக்கும் சர்க்கார் பத்திரம் மற்றொரு பாகத்தில் போடப்பட்டிருக்கிறது காணலாம். ஷை பத்திரங்களின் வாங்கிய விலையைவிட தற்காலம் அவைகள் விற்கும் விலை குறைவாக விருக்கிறபடியால் அதை ஈடுசெய்வதற்குத் தனியாக வருஷாந்திர லாபத்தில் மேற்கண்ட தொகை ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கிறது.

இப்போது சொத்து வகையறுக்களைப்பற்றி கவனிப்போம். இதன்கீழ் உள்ள முதல் இனமானது இந்த பாங்கர்களால் பல வழிகளிலும் வெளியில் கடனுகக் கொடுக்கப்பட்ட தொகை களைத் தனித்தனியாகக் காட்டப்பட்டிருக்கிறது.

2-வது இனத்தில் உள்ளது வசூல் செய்வதற்காக அனுப் பப்பட்டிருக்கும் உண்டிகளின் தொகை. அதற்கடுத்த இனமா னது பலவகைச் செலவுகளுக்காக முன்பணமாகக கொடுக்கப் பட்ட தொகை. அதாவது கோர்ட்டு செலவுக்காகப் பணம் அனுப்பவேண்டியதாக விருந்தால் இவ்வளவு தொகைதான் வேண்டும் என்று முன்னுல்தெரியாதிருந்து பணமும் முன்னுடி யனுப்பவேண்டியுமிருந்தால், ஒரு உத்தேசமான தொகை முந்தி யனுப்பிவிட்டுப் பிறகு செலவு கணக்கு வந்தவுடன் முன் அனுப்பிய தொகைகளை அந்தந்தக் கணக்குகளுக்கு மாற்றிக் கொள்வார்கள்.

அதற்கடுத்த இனமானது பாங்கின் உபயோகத்திற்காக வாங்கி யிருக்கும் இரும்புப்பெட்டிகள், மேஜை, நாற்காலிகள் முதலியவைகளின் கிரயத்தைக் குறிப்பிடுகிறது.

4-வது இனம் பலவகைகளில் பாங்குக்குண்டாகும் செல வுகளைக் குறிப்பிடுகிறது.

5-வது இனம் பாங்கிஞல் வாங்கப்பட்டிருக்கும் கட்டடங் களின் கிரயம். இதோடுகூட பாங்குக்குச் சொந்தமான நிலங்க ளின் கிரயமிவ்வளவென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இவை என்னவென்றால் பாங்கர்கள் தங்களுக்கு வரவேண்டிய கடன் தொகைகள் சரியானகாலத்தில் வசூலாகாமலிருந்து வியாஜ்ஜியம் செய்து கடன் வாங்கியவர்களின் நிலங்களை ஏலம்போட்டு, வேறொருவரும் ஏலம் கேட்காததிஞல் பாங்கர்களே ஏலம் எடுத் திருப்பவைகள்.

6-வது இனமானது இந்த பாங்கில் கணக்கு வைத்திருப்பவர்கள் தங்கள் கணக்குகளில் வரவு வைத்துக்கொள்ளும்படி கொடுத்திருக்கும் இதர பாங்குகளின் செக் தொகைகளைக் குறிப்பிடுகிறது.

7-வது இனமானது பாங்கினால் வாங்கப்பட்டிருக்கும் சர்க்கார் பத்திரங்களின் கிரயத்தையும், அவைகளின் வட்டித் தொகையையும் தனித்தனியே காட்டப்பட்டிருக்கிறது.

கடைசி இனம் பாங்கர்களிடம் இருக்கும் கையிருப்புத் தொகையும், அவர்களின் பாங்கர்களிடம் நடைமுதல் கணக்கில் இருக்கும் தொகைகளையும் காண்பிக்கிறது.

இந்தக் கணக்கில் காணப்படும் இரண்டு பாகத்தின் மொத்தத் தொகைகள் சமமாக இருப்பதுதான் இந்தக் கணக்கு சரி என்பதற்கு அத்தாட்சியாகிறது.

நடைமுதல் கணக்குகளில் ஏராளமான தொகைகள் போடப்பட்டு, அவைகள் எந்த நிமிஷத்தில் கேட்டாலும் கொடுக்கச் சௌகரியமாக இருக்கும்பொருட்டு, பாங்கர்கள் போதுமான அளவு கையிருப்பில் தொகைகள் வைத்துக் கொண்டும், இதர பாங்குகளில் தங்கள் நடைமுதல் கணக்குகள் வைத்துக்கொண்டும் இருப்பது காணலாம். இதைத்தவிர சர்க்கார் பத்திரம் வாங்கியிருப்பதானது, அந்த தொகை வேண்டியிருக்கும்பக்ஷத்தில் அவைகளின் ஈட்டின்பேரில் இதர பாங்குகளில் கடன் வாங்குவதற்கு அநுகூலமாகவிருக்கிறது.

மேற்கூறிய கணக்கானது பாங்கர்களால் வாரத்திற்கு ஒரு முறை தயாரிக்கப்பட்டு பாங்கின் ஸ்திதியைப்பற்றி அப்போதைக்கப்போது தெரிந்துகொண்டு வேண்டியதை அவ்வப்போது

செய்துகொண்டு பாங்கினுடைய யோக்கியதைக்குறைவுபடாமல் பாதுகாத்துக் கொண்டிருக்கப்படும். பொது ஜனங்களுக்கும் இதன் மூலமாய் பாங்கில் நம்பிக்கை அதிகரித்து அவர்கள் மேன்மேலும் அதிக டிபாசிட்டுகள் போட்டுக்கொண்டே வருவார்கள்.



# PART II.

## கோவாபரேடிவ் பாங்குகள்

## Co-operative Banks.

---

முதற் பாகத்தில் சொல்லப்பட்ட பாங்குகள் நமது தேசத்தின் வியாபார அபிவிர்த்திக்கும், பெருத்த முதலாளிகளின் உபயோகத்திற்கும் ஆதாரமாக இருக்கின்றனவென்று சொல்லப்பட்டது. சாமான்யமான ஏழை ஜனங்களுக்கு அத்தகைய பாங்குகள் அவ்வளவு சௌகரியம் செய்ய இயலாதன. ஏனெனில், பெருத்த வியாபாரிகளுக்கு ஏராளமான தொகைகள் கடனாகக் கொடுத்துக்கொண்டும், அவர்களின் வியாபார சம்பந்தமாய்ப் பலவிதமான வேலைகள் செய்துகொண்டும் இருப்பதால் ஏழைஜனங்களின் சௌகரியத்திற்குத் தகுந்தவாறு சில்லறைக் கடன்கள்கொடுத்து உதவி செய்ய முடியாதவைகளாக இருக்கின்றன. ஒவ்வொரு தேசத்திலும் பெருத்த ஐசுவரியவான்கள் சொல்பமாயும், ஏழை ஜனங்கள் அதிகமாகவுந்தான் இருப்பார்கள். நமது தேசத்திலும் அப்படித்தான் இருக்கிறது. அயல் தேசங்களில் இருப்பதைவிட நமது தேசத்தில் ஏழை ஜனங்கள் பன்மடங்கு அதிகமாகவே இருக்கிறார்கள். இப்போது சொல்லப்படும் கோவாபரேடிவ் பாங்குகள் முக்கியமாய் ஏழை ஜனங்களுக்கும், சொல்ப ஜீவனமுள்ளவர்களுக்கும் உபயோகமாகவிருக்கின்றன. இந்த ஆங்கில பதங்களாகிய "கோவாபரேடிவ் க்ரெடிட் சொஸைடி" என்பதற்குத் தமிழில் "ஐக்கிய நாணயச்சங்கம்" என்று பெயர் சொல்லப்படும். இச்சங்கங்களை ஸ்தாபனம் செய்வதற்குத் துரைத்தனத்தாரால் பிரத்தியேகமான சட்டம் ஏற்படுத்தப்பட்டு, இவைகளின் அபிவிருத்திக்காகப் பிரத்தியேகமான உத்தியோ

கஸ்தர்கள் நிர்மாணம் செய்யப்பட்டு ஏழைஜனங்களுக்கு இவைகள்மூலமாய்ப் பலவித சௌகரியங்கள் செய்யப்பட்டு வருகின்றன. இவைகளின் நோக்கங்கள் என்னவென்றும், இவைகளில் எவ்வளவு பிரிவுகள் இருக்கின்றனவென்றும், இவைகள் வேலைசெய்யும் முறை எப்படியென்றும் இங்குக் கூறுவோம்.

## கோவாபரேடிவ் சொசைடிகளின் நோக்கங்கள்.

கோவாபரேடிவ் சொசைடிகளானவை முக்கியமாய் ஏழை ஜனங்களின் சௌகரியத்தைக் கருதி ஏற்பட்டுள்ளனவென்று சொன்னோம். ஒவ்வொரு ஸ்தாபனத்திற்கும் முதல் தொகை அவசியமாகத் தேவையாக விருந்தாலும், இந்தக் கோவாபரேடிவ் சொஸைடிகள் ஏழை ஜனங்களால் ஸ்தாபிக்கப்படுவதால் இந்த ஸ்தாபனங்களுக்கு வேண்டிய அளவு முதல்தொகை இவர்களால் செலுத்தமுடியாது. அது காரணம்பற்றி இந்த ஸ்தாபனங்களுக்கு முதல்தொகையைப் பிரதானமான ஆதாரவாக ஏற்படுத்தவில்லை. இந்தச் சங்கங்களிலுள்ள அங்கத்தினர்களுள் ஏற்படுகிற ஐக்கியபந்தந்தான் இவைகளின் அபிவிருத்திக்கு உண்டான முக்கியமான ஆதாரம். இந்தச் சங்கங்களில் சேருகிற அங்கத்தினர்கள், முதலாளிகளல்லாமல், சாமான்ய ஜனங்களாகத்தான் இருப்பார்கள். ஒரு சங்கத்தில் சேர்ந்திருக்கும் அங்கத்தினர் ஒவ்வொருவரும் ஒருவருக்கொருவர் சகோதரபாவமாகவே நடந்துகொள்ள வேண்டுமென்பதுதான் இந்தச் சங்கத்தின் கருத்து. இதில் சேருவதானது தங்களது செல்வநிலைமையை அபிவிருத்தி செய்துகொள்ளுவதற்காக இருக்க வேண்டும். இதில் சேருபவர்கள் பிறருடைய தூண்டுகோல் இல்லாமல் தாங்களாகவே வந்துசேரவேண்டும். தங்களுள் பொதுவாக ஏற்பட்ட குறைகளை நிவர்த்தி செய்துகொள்ள இச்சங்கங்கள் ஏற்படுவதனால் இவர்களுக்குள் பேதபுத்தி இருக்

கக்கூடாது. இவர்களுள் ஒருவர் மேம்பட்டவர், மற்றொருவர் கீழ்ப்பட்டவர் என்ற வித்தியாசம் இல்லாமல் எல்லோரும் சகோதரர்களாகவே பாவித்து நடந்துகொள்ளவேண்டும். இவர்கள் தங்களுக்கு ஆகவேண்டிய காரியங்களைமாத்திரம் செய்து கொள்ளவேண்டுமேயல்லாமல், தங்கள் சங்கத்தின் அங்கத்தினரல்லாதவர்களுக்கு ஒன்றும் செய்யக்கூடாது.

ஆகையால் ஐக்கிய நாணயச்சங்கமானது ஏழைகளாகவிருக்கும் ஒரு கூட்டத்தாரால் சகோதரபாவமான கொள்கைகளைக்கொண்டு தங்களது செல்வநிலையை விருத்திசெய்வதற்கான காரியங்களைச் செய்துகொள்வதற்காகவும் தங்களுக்கு இருக்கும் குறைகளை நிவர்த்தி செய்துகொள்வதற்காகவும் ஏற்பட்ட ஓர் ஸ்தாபனம்.

இந்தச்சங்கத்தில் சேர்ந்திருக்கும் மெம்பர்கள் ஒவ்வொருவரும் எல்லோருடைய க்ஷேமத்தைக்கருதியே வேலைசெய்யவேண்டுமென்றும், சங்கத்தின் மெம்பர்கள் எல்லோரும்சேர்ந்து அவர்களுள் ஒவ்வொருவருடைய க்ஷேமத்திற்காக வேலைசெய்ய வேண்டுமென்றும் கொள்கையை வைத்திருக்கவேண்டும்.(Each for all and all for each.) இம்மாதிரி ஓர்வித ஒற்றுமையும், மெம்பர்களுக்குள் ஏற்பட்டிருக்கும் ஐக்கியபக்தியும் உள்ள சங்கத்தில் வேறு யாராவது சேரவேண்டுமானால், ஒருவரே ஏகதேசத்தில் அவரைச் சேர்த்துக்கொள்ள அதிகாரமில்லை. எல்லோரும் ஒன்றுசேர்ந்து இந்தச் சங்கத்தில் சேரவிரும்புவோர்களை, அவர்களுக்கு உசிதமானவர்களென்று தோன்றினால்தான் அவரைச் சேர்த்துக்கொள்ள சம்மதிப்பார்கள். புதிதாகச்சேரவிரும்புகிறவர் சரியான நடவடிக்கை யுள்ளவராவென்றும், மற்ற மெம்பர்களுடன் சேர்ந்து பேதபுத்தியில்லாமல் இருப்பாராவென்றும் நீர விசாரித்துக்கொண்டுதான் அவரைச்சேர்த்

துக்கொள்வார்கள். ஆனால் இந்தச் சங்கங்களில் இவ்வளவு மெம்பர்கள்தான் இருக்கவேண்டுமென்ற வரையறுப்புக் கிடையாது. எவர்கள் சேரவேண்டுமென்று இஷ்டப்படுகிறார்களோ அவர்கள் சரியான நடவடிக்கையுள்ளவராயிருந்தால் சேரலாம். சேருவதற்குமுன்னாவது அல்லது சேர்ந்தவுடனாவது இச்சங்கத்தின் நோக்கங்களைச் செவ்வையாகத் தெரிந்துகொள்ளல் வேண்டும்.

இம்மாதிரிச் சங்கங்கள் வரையறுக்கப்பட்டவைகளென்றும், வரையறுக்கப் படாதவைகளென்றும் இருவகைப்படும். கிராமாந்தரங்களில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் சங்கங்கள் வரையறுக்கப்படாதனவாகவும், முக்கியப் பட்டணங்களிலுள்ளவைகள் வரையறுக்கப்பட்டனவாகவும் இருக்கும். ஆங்கிலத்தில் இவைகளுக்கு "அன்லிமிடெட்" (unlimited) என்றும் "லிமிடெட்" (limited) என்றும் சொல்லப்படும்.

## வரையறுக்கப்படாத சங்கங்கள்.
## Unlimited Societies.

வரையறுக்கப்படாத சங்கங்களுக்கு அவைகளின் மெம்பர்கள் மேற்படி சங்கங்கள் வாங்கும் கடன்களுக்குத் தங்களது சொந்த ஜீவேஜிகளைக் கட்டுப்படுத்தி வைப்பார்கள். ஏனெனில் இம்மாதிரிச் சங்கங்கள் கிராமாந்திரங்களில் ஸ்தாபிக்கப்படுகின்றனவாதலால் இவைகளின் அங்கத்தினர் மிகக்குறைவாக விருப்பார்கள். இவர்கள் சங்கங்களின் நடவடிக்கைகளைச் சரிவர நடத்தும்பொருட்டும், இவர்களுக்குப் பிறர் டிபாசிட்டுகளாகவோ, அல்லது கடன்களாகவோ கொடுக்கும் தொகைகளுக்குத் தகுந்த ஜாமீன் இருக்கும் பொருட்டும் இவைகளிலுள்ள மெம்பர்களின் சொந்த ஜீவேஜிகளைக் கட்டுப்படுத்தும்படி ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. கிராமாந்தரங்களிலுள்ள ஏழை

ஜனங்களுக்கு அவரவர்கள் தேவைக்குத் தகுந்தவாறு சொல்பவட்டிக்குக் கடன் கொடுத்து, சௌகார்களிடமும், செட்டிமார்களிடமும் போய் அதிக வட்டிக்குக் கடன்வாங்கித் தங்களுக்கு அதனால் உண்டாகும் ஏராளமான நஷ்டத்திலிருந்து விடுவிக்கிற இந்தச் சங்கங்கள், தாங்கள் கொடுக்கும் தொகைகளுக்குப் போதுமான அளவு ஜாமீன் வேண்டுமென்றால் அவர்கள் ஏன் கொடுக்கக்கூடாது? ஒரு சங்கத்திலுள்ள மெம்பர்களின் சொந்த ஜவேஜிகள் அந்தச்சங்கம் வெளியில் வாங்கியிருக்கும் கடன்களுக்காக ஜாமீனாக உள்ளது என்பதானது இந்தச் சங்கத்தின் முக்கிய நோக்கத்திற்குக் காரணமாகவிருக்கிறது. அதென்னவென்றால் சங்கத்தின் மெம்பர்களனைவரும் அவர்களுள் ஒவ்வொரு மெம்பர்களின் குறைகளை நீக்க வேண்டுமென்றும் ஒவ்வொரு மெம்பரும் அவர்களுடைய பொதுக் காரியங்களில் சிரத்தை எடுத்துக்கொண்டு வேலை செய்ய வேண்டுமென்றும் உள்ள நோக்கத்தைக் காட்டுகிறது. (Each for all and all for each.)

தவிர இந்தச் சங்கத்திலுள்ள மெம்பர்கள் ஒருவருக்கொருவர் சகோதரர்களாக பாவித்துக்கொள்ள வேண்டுமென்று ஏற்கனவே சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் இந்தச்சங்கமானது ஒரு பெரிய குடும்பமெனச் சொல்லப்படலாம். இதின் மெம்பர்கள் சகோதரபாவத்திலிருப்பதினாலும் இவர்களில் ஒவ்வொருவருடைய சொந்த ஜவேஜியும் இவர்களுள் பொதுவாக ஸ்தாபிக்கப்பட்ட சங்கத்திற்குப் பாத்தியப்பட்டிருப்பதினாலும், இந்தச்சங்கமானது அனேகம் பேர்வழிகள் சேர்ந்துள்ள பாகமாகாத குடும்பமென்று பாவித்துக்கொள்ளப்படலாம். சங்கத்திற்கு ஏராளமான நஷ்டம் ஏற்பட்டால் இந்தமெம்பர்கள் அந்த நஷ்டத்தைத் தங்களுக்குள்ள வீதாசாரப்படித் தங்கள் சொந்த ஜவேஜிகளிலிருந்து ஈடுசெய்யக் கடமைப்பட்டவர்கள்.

## வரையறுக்கப்பட்ட சங்கங்கள்.

## Limited Societies.

வரையறுக்கப்பட்ட சங்கங்கள் என்றால், அந்தச் சங்கங்களின் மெம்பர்கள் ஒவ்வொருவரும் எவ்வளவு ரூபா பங்குத் தொகை செலுத்தியிருக்கிறார்களோ அந்தமட்டில்தான் அந்தச் சங்கங்களினால் வாங்கிய கடன்களுக்கு ஜவாப்தாரிகளாவார்கள். இம்மாதிரிச் சங்கங்கள் ஜனத்தொகை மிக அதிகமாக உள்ள பெரிய பட்டணங்களில் இருக்குமேயல்லாமல் கிராமங்களில் இரா. மற்றப்படி இச்சங்கங்களின் நோக்கங்களில் ஒருவித வித்தியாசமுமில்லை.

## இச்சங்கங்களின் முதல்தொகை.

## The Capital of these Societies.

துரைத்தனத்தாராலேயே இம்மாதிரிச் சங்கங்கள் நடத்துவதற்காக உள்ள விதிகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. அவ்விதிகளை அனுசரித்துத்தான் இவைகள் வேலைசெய்ய ஆரம்பிக்கவேண்டும். இந்தச் சங்கங்களின் முதல்தொகை பங்கு ஒன்றுக்கு ரூ. 5 வீதம் இவ்வளவு பங்குகள் என்று ஏற்படுத்தப்பட்டிருக்கும். ஏழை ஜனங்களின் சௌகரியத்திற்குத் தகுந்தவாறு பங்குத்தொகை ரூபாய் ஐந்துதான் கொடுக்கும்படி ஏற்பட்டிருக்கிறது. அதற்கு அந்தத் தொகையைச் சிறிது சிறிதாகச் செலுத்தத் தவணை ஏற்பட்டிருக்கிறது. ஒவ்வொரு ரூபாயாக விதியில் ஏற்பட்டிருக்கும் தவணைப்பிரகாரம் செலுத்தலாம்.

ஒரு சங்கம் ஸ்தாபிக்கிறதானால் ஒரு கூட்டத்தார் ஒன்று சேர்ந்து தாங்களிருக்கும் இடத்தில் ஓர் சங்கம் ஏற்படுத்தித்

தங்களுக்கு வேண்டிய சௌகரியங்களைச் செய்துகொடுக்க வேண்டுமென்று அதிகாரிகளுக்கு மனுச் செய்துகொண்டால் அவர்கள் நேரே வந்து, கூடி சங்கமானது அவ்வூருக்குத் தேவையாவென்று பார்த்துக்கொண்டு, அவ்வூருக்குத் தகுந்த வாறு அதன் முதல்தொகை இவ்வளவு ரூபா என்றும், அவர்கள் இவ்வளவு ரூபாவரைக் கடன் வாங்கலாமென்றும் ஏற்படுத்தி விடுவார்கள். இவ்வளவு ரூபாவரையில் கடன் வாங்கலாமென்கிறதானது வரையறுக்கப்படாத சங்கங்களுக்குச் சங்கத்தின் மெம்பர்களின் மொத்த ஆஸ்திகளின் பொறுமானத்தைப் பொருத்ததாயும், வரையறுக்கப்பட்ட சங்கங்களுக்கு அவைகளால் வசூல் செய்யப்பட்ட பங்குத் தொகைகளைப் போல் இவ்வளவு மடங்கென்றும் அதிகாரிகளாலேயே சங்கம் ஆரம்பிக்கும்கால் ஏற்படுத்தப்பட்டிருக்கும். அந்த எல்லைக்குட்பட்டு இந்தச்சங்கங்கள் கடன் வாங்கிக்கொண்டு தங்கள் மெம்பர்களுக்கு அவரவர்களின் தேவைக்குத் தகுந்தவாறு கொடுத்துக்கொண்டிருப்பார்கள். தாங்கள் வெளியில் கடனைவாங்கும் தொகைகள் இவ்வளவு வட்டிக்கு மேற்பட்டு வாங்கக்கூடாது என்றும், தாங்கள் மெம்பர்களுக்குக்கொடுக்கும் கடன்தொகைகளுக்கு இவ்வளவு வட்டிதான் விதிக்கவேண்டியதென்றும் துரைத்தனத்தாரால் ஏற்படுத்தப் பட்டிருக்கும் விதிகளிலேயே (Model by-laws) நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. அந்த விதிகளுக்குமீறி நடவாமல் இச்சங்கங்கள் நடவடிக்கை செய்துகொண்டு, தாங்கள் சற்றுக் குறைந்தவட்டிக்கு வாங்கிய கடன் தொகைகளைத் தங்களுடைய மெம்பர்களுக்குச் சற்று உயர்ந்த வட்டிக்குக்குக் கொடுத்து, அதனால் சங்கத்திற்குக் கிடைக்கும் லாபத்தை க்ஷேமநிதிக்கும், இந்தச் சங்கங்களைப் பரிசோதனை செய்கிற யூனியன்களுக்கும், பொதுநன்மைக்கான நிதிக்கும் தங்கள் விதிகளில் ஏற்பட்ட பிரகாரம் ஒதுக்கிவைத்து, மிகுதி

யாகவிருக்கும் தொகையைப் பங்குக்காரர்களுக்கு வீதாசாரப் படிப் பிரித்துக் கொடுப்பார்கள்.

இச் சங்கங்கள் ஏழை ஜனங்களுக்குத் தங்களாலியன்றமட்டில் சிறிது சிறிதாகப் பொருள் சேர்த்துக்கொள்வதற்கும் வேண்டிய சாதனங்கள் செய்கின்றன. ஏழை ஜனங்களுடைய பொருளாதார நிலைமையை விருத்தி செய்துகொள்ளவேண்டியதற்காக ஏற்பட்டவைகளாதலால், இச்சங்கங்கள் ஏழ்மைத் தனத்திலிருக்கும் தங்கள் மெம்பர்களின் சம்பாத்தியத்திலிருந்து மிகச்சிறிய தொகைகளை அடிக்கடி வாங்கிக்கொண்டு, அப்படிப் போடப்பட்ட தொகைகளுக்குச் சிறிது வட்டியுஞ்சேர்த்து, நாளாவர்த்தியில் ஒரு பெரிய தொகையைச் சேர்ப்பித்து அவரவர்களுக்குக் கொடுப்பார்கள். சௌகார்களிடமும், செட்டிமார்களிடமும் நமது ஜனங்கள் அடிக்கடிச் சிறிது சிறிதாகக் கடன் வாங்கி, அதற்காகக் கொடுக்கும்படியாக விருக்கும் அதிக வட்டியைத் தாங்கள் புத்திசாலித்தனமாக இந்த ஐக்கிய நாணயச் சங்கங்களில் செலுத்திக்கொண்டிருந்தால் இவர்களுக்கு வருங்காலத்தில் கவலையில்லாமல் ஜீவனம் செய்யவேண்டியதற்கான ஒரு பெரிய முதலைச் சேகரித்துக் கொள்ளலாம்.

## ஐக்கிய நாணயச்சங்கங்கள் அதிகச்செலவுகளை நிறுத்த என்னென்ன செய்கின்றன.

ஏழை ஜனங்கள் தாங்கள் சௌகார்களிடமும், செட்டிமார்களிடமும் வாங்கும்படியாகவிருக்கும் கடன்களுக்குக் கொடுக்கும்படியாகவிருக்கிற அதிகவட்டித் தொகையை, ஐக்கிய நாணயச் சங்கங்களில் தங்கள்பேரால் போட்டுக்கொண்டு அதற்குச் சொல்பவட்டியையும் சம்பாதிக்கலாம் என்று சொல்லப்

பட்டது. இச் சங்கங்கள் இன்னும் எவ்வகையில் தங்கள் மெம்பர்களுக்கு அதிகமாகச் செலவாகிற தொகைகளை மிகுதி செய்து கொடுக்கின்றன என்று பார்ப்போம். இதைப்பற்றிக் கூறுங்கால், இந்தச் சங்கங்களிலுள்ள மெம்பர்கள் சகோதர பாவமாகவும், ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்களாகவும் இருப்பதாக ஏற்கனவே சொல்லப்பட்டிருப்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். உதாரணமாக ஒரு சங்கத்தில் நூறு மெம்பர்கள் இருப்பதாக வைத்துக்கொள்வோம். ஒரு கிராமத்தில் ஒரு சங்கம் ஸ்தாபித்து அதில் அந்த கிராமத்தார்கள் மெம்பர்களாகச் சேருவதனால், அந்த கிராமத்திலுள்ள ஒவ்வொரு குடும்பத்திலும் ஒவ்வொருவர்தான் மெம்பராகச் சேருவார்களே யல்லாமல் குடும்பத்தில் இருக்கிற ஒவ்வொருவரும் அந்தச் சங்கத்தில் மெம்பராகச் சேரமாட்டார்கள். ஆனதுபற்றி மேலே சொல்லப்பட்ட சங்கத்திலுள்ள நூறு மெம்பர்களில் ஒவ்வொரு மெம்பரும் ஒவ்வொரு குடும்பத்திற்குப் பிரதிநிதியாக விருப்பது காணலாம். இந்த நூறு குடும்பத்திற்கும் பொதுவாகத் தேவையாயுள்ள சாமான்கள் அனேகம் உண்டு. தங்களுக்கு வேண்டிய சாமான்களை ஒவ்வொருவரும் தனித்தனியே தங்களூரில் பிழைக்க வந்திருக்கும் பலசரக்கு கடைக்காரரிடம் சிறிது சிறிதாக வாங்கி, நமது கையை எடுத்து நமது கண்ணைக் குத்திவிடுகிறமாதிரி, நம்மிடத்தில் சம்பாதிக்கவந்து நம்மையே ஏழைகளாகச் செய்துவிடுகிற பலசரக்குக் கடைக்காரர்களிடத்தில் போகாமல், இச் சங்கத்திலுள்ள நூறு மெம்பர்களும் அவரவர் குடும்பத்திற்குவேண்டிய சாமான்களைத்தெரிந்து கொண்டு மொத்தம் எல்லோருக்குமாக ஒவ்வொன்றிலும் எவ்வளவு சாமான்கள் வேண்டுமோ அவ்வளவையும் இந்த ஐக்கிய நாணயச்சங்கத்தின்மூலமாக வாங்கிக்கொண்டால், இவர்கள் ஒவ்வொருவரும் வைசியர்கடையில் தனித்தனியே வாங்கும்போது

அந்தச்சாமான்களுக்குக் கொடுக்கும்படியாக விருக்கும் தொகை யைவிட மிகக்குறைவான தொகைதான் கொடுக்கும்படி இருக் கும். இம்மாதிரிக் குறைவுபடுகிற அதிகச் செலவை இந்தச் சங்கத்தில் ஒவ்வொரு மெம்பர்களும் போட்டுக்கொண்டே வர லாம். இந்தவைசியர் தாம் வாங்கும் சரக்குகளைத் தட்டிட்டம் தனித்தனியே வாங்கும் ஒவ்வொரு வரிடத்திலும் அதிக லாபத் திற்கு விற்று அப்படி எல்லோரிடமும் வாங்கிய லாபத்தொகை யைத் தம்முடைய சொந்த உபயோகத்திற்கு எடுத்துக்கொண்டு விடுகிறார். இந்தச் சங்கங்கள்மூலமாய் வாங்கினல், குறைந்த விலைக்கு வாங்குவதோடுகூட, வாங்குபவர்கள் தங்களுடைய சொந்த உபயோகத்திற்கே வாங்குகிறபடியால், சாமான்களும் நல்லதாகவே இருக்கும். அளவும் குறையாது. பார்த்து வாங்க லாம். கூட்டுறவின் முக்கியமான தத்துவம் இதுவே. இதை நன்றாக உணர்ந்தால், கூட்டுறவின் ஊக்கம் அதிகமாகும்.

## ஜில்லா பாங்குகள். District Central Banks.

இதுகாறும் ஏழை ஜனங்களுக்குக் கடன் கொடுக்கும் ஐக்கிய நாணயச் சங்கங்களைப்பற்றிச் சொன்னும். இத்தகைய ஐக்கிய நாணயச் சங்கங்கள் ஏழைகளாலேயே ஏற்பட்டிருக்கிற படியால், தங்களுடைய மெம்பர்களாகிய இந்த ஏழைகளுக்கு வேண்டிய அளவு கடன் கொடுப்பதற்குப் போதுமான தொகை யை இச்சங்கங்களுக்கு கொடுக்கிறவர் யார்? இந்தச் சங்கங்கள் குறைந்தவட்டிக்குக் கடன் வாங்கிச் சற்று உயர்ந்த வட்டிக்குத் தங்கள் மெம்பர்களுக்குக் கொடுக்கின்றனவென்று ஏற்கனவே சொல்லப்பட்டிருக்கிறது. மேற்கூறப்பட்டிருக்கிற ஜில்லா பாங்குகள்தாம் இச் சங்கங்களுக்குக் கடன் கொடுக்கின்றன. இந்தஜில்லாபாங்குகள் எப்படி ஸ்தாபிக்கப்பட்டிருப்பதென்றும் இவைகளின் கடமை என்னவென்றும் இங்குக் கூறுவோம்.

ஐக்கிய நாணயச் சங்கங்களின் விதிகள் எப்படித் துரைத் தனத்தாராலேயே ஏற்படுத்தப்பட்டிருக்கின்றனவோ, அதே மாதிரி இந்த பாங்குகளின் விதிகளும் துரைத்தனத்தாராலேயே ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. இந்த பாங்கின் அங்கத்தினர் பெரும்பான்மையும் ஐக்கிய நாணயச் சங்கங்கள்தான். ஒரு ஜில்லாவிலுள்ள ஒவ்வொரு ஐக்கிய நாணயச் சங்கமும் ஜில்லா பாங்கில் பங்கு எடுத்துக்கொண்டு மெம்பராகச் சேரவேண்டும். ஏழைகளால் ஏற்படுத்திய ஐக்கிய நாணயச் சங்கங்களாகையால் இவைகள் ஜில்லா பாங்கில் பங்குகள் எடுத்துக்கொள்வதைவிட அதிகமானதொகைகள் செலுத்தமுடியாது. ஆகையால் பெருத்த முதலாளிகளும் இந்த ஜில்லா பாங்கில் பங்கு எடுத்துக்கொள் வார்கள். இந்த ஜில்லா பாங்குகள் முக்கியமாய் ஐக்கிய நாணயச் சங்கங்களுக்குத்தான் கடன் கொடுக்கவேண்டுமென்ற நிபந்தனை ஏற்பட்டிருப்பதாலும், அப்படி ஐக்கிய நாணயச் சங்கங்களுக் குக்கொடுக்கும் கடன்கள் இச்சங்கங்களை மேல்விசாரணைசெய்து கொண்டு வருகிற சூபர்வைசிங் யூனியன்களாலும், துரைத் தன உத்தியோகஸ்தர்களாலும் சிபார்சு செய்யப்பட்டுத்தான் கொடுக்கப்படுகின்றனவாதலாலும், இந்த ஜில்லா பாங்குகளினால் கொடுக்கப்படுகின்ற கடன் தொகைகளுக்கு ஒருவிதமான சேத மும் வாராது என்ற நம்பிக்கை பெருத்த முதலாளிகளுக்கு ஏற் பட்டுவிடுகிறதனால், அவர்களிடமிருந்து இந்த ஜில்லா பாங்கு களுக்கு ஏராளமான தொகைகள் நிர்ணயத்தவணை டிபாசிட்டு களாக வருகின்றன. தவிர, துரைத்தனத்தார் அனுமதியின் பேரில் ஜில்லா போர்டுகள், முனிசிபாலிடிகள், மற்றமுள்ள துரைத்தனத்தார் விசாரணைக்குட்பட்ட பொது ஸ்தாபனங்கள் இவைகளிடமுள்ள தொகைகளை நிர்ணயத்தவணை டிபாசிட்டு களாக இந்த ஜில்லா பாங்கில் போடுகிறார்கள். மாகாண கோவாபரேடிவ் பாங்கிலிருந்தும் (Provincial Co-operative

or Apex Bank) இந்தியா இம்பீரியல் பாங்கிலிருந்தும் (Imperial Bank of India) அப்போதைக்கப்போது வேண்டிய தொகைகளை ஜில்லா பாங்குகள் வாங்கிக்கொள்ளவும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கின்றன. ஆகையால் இந்த ஐக்கிய நாணயச் சங்கங்களுக்கு மேற்சொல்லிய ஜில்லா பாங்குகள் அப்போதைக்கப்போது வேண்டிய தொகைகளைக் கடனாகக் கொடுத்து, ஒவ்வொரு கடன்தொகைக்கும் ஏற்பட்ட தவணைப் பிரகாரம் அவைகளை வசூலித்துக்கொள்கிறார்கள்.

இந்த ஐக்கிய நாணயச் சங்கங்கள் தாங்கள் ஜில்லா பாங்கில் செலுத்திய பங்குத் தொகைகளைத்தவிர, தங்கள் விதிப்பிரகாரம் ஒவ்வொரு வருஷத்திய நிகர லாபத்தில் இவ்வளவென்று நிர்ணயிக்கப்படுகிற க்ஷேமநிதித் தொகைகளை, இந்த ஜில்லா பாங்குக்குச் செலுத்தக் கடமைப்பட்டவர்கள். ஆகையால் ஒவ்வொரு வருஷமும் இச்சங்கங்களால் ஜில்லா பாங்குக்குச் செலுத்தப்படும் க்ஷேமநிதித் தொகைகளை ஏராளமாகச் சேர்த்து, அதனால் சங்கங்களுக்குக் கொடுக்கும் கடன்தொகைகளை இப்போது கொடுப்பதைவிடக் குறைந்த வட்டிக்குக் கொடுக்க ஜில்லா பாங்குகள் இயல்புள்ளனவாக ஆகின்றன. நமது தேசத்தின் செல்வப் பெருக்கத்திற்கு மேற்சொல்லியபடி ஒவ்வொரு ஜில்லா பாங்குகளிலும் மேன்மேலும் விருத்தியடைந்துகொண்டிருக்கும் ஐக்கிய நாணயச் சங்கங்களின் க்ஷேமநிதித் தொகைகள் ஒரு முக்கிய காரணமாகும். இச்சங்கங்களும் ஜில்லா பாங்குகளும் ஸ்தாபனம் செய்யப்பட்டு அதிக நாளாகாதபடியால் எவ்வளவு தூரம் இவைகளால் நமது தேசத்தின் செல்வப்பெருக்கம் விருத்தியடையும் என்பது இப்போது அவ்வளவாகத் தெரியவில்லை. இது நாளடைவில் தான் தெரியவரும். ஆனால் இந்த விஷயத்தைப்பற்றி இப்போது

நமக்குச் சரியான உணர்ச்சி ஏற்பட்டிருக்கிறதென்று சொல்லலாம்.

## மாகாண பாங்கு.

## Provincial Co-operative Bank.

சங்கங்களுக்குக் கடன்கொடுத்து உதவிசெய்வதற்கு எப்படி ஜில்லா பாங்குகள் ஏற்பட்டிருக்கின்றனவோ, அதே மாதிரி ஜில்லா பாங்குகளுக்குவேண்டிய தொகைகளைக் கொடுத்து உதவிசெய்வதற்கு மாகாண பாங்கு ஏற்பட்டிருக்கிறது. ஒரு மாகாணத்திலுள்ள ஒவ்வொரு ஜில்லா பாங்கும் மாகாண பாங்கில் பங்குகள் எடுத்துக்கொள்ளக் கடமைப்பட்டவர்கள். ஐக்கிய நாணயச் சங்கங்கள் எப்படித் தங்களது க்ஷேமநிதித் தொகைகளை ஜில்லா பாங்குகளில் கட்டக் கடமைப்பட்டவைகளோ, அதேமாதிரி எல்லா ஜில்லா பாங்குகளும் தங்களது க்ஷேமநிதித் தொகைகளை மாகாண பாங்கில் கட்டக் கடமைப்பட்டவைகள். ஜில்லா பாங்குகளிலிருப்பதுபோல், மாகாண பாங்கிலும் தனித்த மெம்பர்கள் (Individual Members) அனேகம்பேர் இருப்பார்கள். அனேகம் பெருத்த முதலாளிகள் மாகாண பாங்கில் பலவிதமான டிபாசிட்டுகள் போட்டுக் கொண்டிருப்பார்கள். இதிலும் துரைத்தனத்தார் விசாரணைக்குட்பட்ட பொது ஸ்தாபனங்களிலுள்ள தொகைகள் ஏராளமாகப்போடப்பட்டிருக்கின்றன. இவைகளைக்கொண்டு மாகாண பாங்கிலிருந்து ஜில்லா பாங்குகள் அப்போதைக்கப்போதுவேண்டிய தொகைகளை வாங்கிக்கொள்ளலாம். ஒரு பெரிய ஆற்றில் வரும் ஜலத்தைப் பாய்காலாக ஏற்பட்டிருக்கும் வாய்க்கால்களுக்கும், அவைகளிலிருந்து நிலங்களுக்கும் பாய்ச்சுகிறது போல, மாகாண பாங்கிலிருந்து வேண்டிய தொகைகளை ஜில்லா பாங்குகள் வாங்கி, ஐக்கிய நாணயச் சங்கங்களுக்குக் கொடுத்து,

அவைகள்மூலமாய் ஏழை ஜனங்களுக்குக் குறைந்த வட்டிக்கு அப்போதைக்கப்போது வேண்டிய தொகைகளைக் கொடுத்து அவர்களுக்குச் சௌகரியம் செய்துவருவதைக் காணலாம்.



# Co-operative Supervising Unions.

## சூபர்வைசிங் யூனியன்கள்.

ஏழை ஜனங்களுக்கு உதவி செய்யும்பொருட்டு ஏற்படுத்தியிருக்கும் ஐக்கிய நாணயச் சங்கங்கள் சரிவர நடைபெறுவதற்காகவும், சங்கங்கள் இல்லாத இடங்களில் அவைகளை ஸ்தாபித்தற்காகவும் சூபர்வைசிங் யூனியன்கள் ஏற்பட்டிருக்கின்றன. இந்த யூனியன்களுக்குத் தாங்கள் வேலைசெய்யவேண்டிய எல்லை இன்னவென்று ஆரம்பத்திலேயே ஏற்படுத்தப்பட்டிருக்கும். அந்த அந்த எல்லைக்குள் வேலைசெய்துகொண்டிருக்கும் சங்கங்கள் அந்த அந்த யூனியனது விசாரணைக்கு உட்பட்டனவாக இருக்கும். ஒவ்வொரு யூனியன் எல்லைக்குட்பட்ட சங்கங்களின் பிரதிநிதிகள் ஷை யூனியன் அங்கத்தினர் ஆவார்கள். இந்த யூனியன்களின் முக்கிய கடமை கூட்டுறவின் தத்துவத்தை ஜனங்களுக்கு போதிப்பதும், சங்கங்களின் நடவடிக்கைகளைச் சீர்திருத்தஞ் செய்வதும், ஒவ்வொரு சங்கத்தின் கணக்குகளையும் அடிக்கடி பரிசோதனை பண்ணுவதுமேயாம். சங்கங்களுக்கு அப்போதைக்கப்போது வேண்டிய கடன் தொகைகள் யூனியனுடைய சிபார்சு இல்லாமல் ஜில்லா பாங்கினால் கொடுக்கப்படமாட்டா. இந்த யூனியன் நிர்வாக சபையார் தங்கள் எல்லைக்குட்பட்ட சங்கங்களை அவைகளின் கணக்குகள் சரிவர எழுதப்படுகின்றனவாவென்று அடிக்கடி பரிசோதனை செய்துகொண்டும், விதிகளுக்கு விரோதமில்லாமல் அவைகள் நடந்துகொண்டிருக்கின்றனவாவென்றும் பார்த்துக்கொண்டிருப்பார்கள். இம்மாதிரி அடிக்கடி சங்கங்களைப் போய்ப் பரிசோதனை செய்வதற்காக ஒவ்வொரு யூனியனிலும் சம்பளம் கொடுத்து ஒரு சூபர்வைசரை நியமித்திருப்பார்கள். அப்படி நியமனம் செய்யப்பட்ட சூபர்வைசர்கள் சங்கங்களைப் போய்ப் பரிசோதனை செய்வதற்கும்

கணக்குகளைச் சரிபார்ப்பதற்கும் வேண்டிய அனுபோகமும், யோக்யதையும் உள்ளவர்களாகவிருப்பார்கள். சூபர்வைசர் பரிசோதனை செய்வதோடுகூட யூனியன் நிர்வாக சபை மெம்பர்களும் அடிக்கடி போய்ச் சங்கங்களைப் பரிசோதனை செய்ய வேண்டும்.

யூனியன்களின் அங்கத்தினர் ஒவ்வொருவரும் அந்த அந்த யூனியன் எல்லைக்குட்பட்ட சங்கங்களின் பிரதிநிதிகளென்பது ஏற்கனவே சொல்லப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு சங்கத்திலிருந்தும் செல்வாக்கும் அனுபோகமும் உள்ளவர்களைத்தான் யூனியன் பிரதிநிதியாகத் தெரிந்தெடுப்பது வழக்கம். ஆகையால் யூனியன் மகாசபை மெம்பர்கள் அனைவரும் ஐக்கியநாணயச் சங்கங்களின் விஷயங்களை நன்கு ஆராய்ந்தவர்களாகவும் அனுபோகமும் செல்வாக்கும் உள்ளவர்களாகவுமே இருப்பார்கள். யூனியன் நிர்வாகசபை மெம்பர்கள் மேற்கூறிய மகாசபை மெம்பர்களால் தங்களுக்குள் தகுந்த பேர்வழிகளைத் தெரிந்தெடுக்கப்படுவார்கள். இந்த நிர்வாகசபை மெம்பர்கள் பிரசாரவேலைசெய்வதற்கும் யோக்யதையுள்ளவர்களாகவிருப்பார்கள். சரிவர நடைபெறாதசங்கங்களைச் சீர்திருத்தஞ்செய்வதற்கு யூனியன் நிர்வாக சபையார் அச்சங்கம் இருக்கும் கிராமத்திற்குப் போய்த் தங்களது மீட்டிங்கை அங்கே நடத்திவிட்டு அந்தச்சங்கத்தைச் சீர்திருத்தம் செய்வதற்குண்டானவைகளையுஞ்செய்வார்கள். இப்பாதிரிச் செய்வதானது கிராமாந்தரங்களிலுள்ள சங்கங்களுக்குப் பலவிதங்களில் உபயோகமாக விருக்கிறது. சங்கங்கள் ஜில்லா பாங்குக்கு அனுப்புகிற கடன் விண்ணப்பங்கள் இந்த யூனியன் மூலமாய்த்தான் அனுப்பப்படவேண்டும். யூனியன்கள் இக் கடன் விண்ணப்பங்களைச் சரிவரப் பார்த்து அவைகளில் கண்ட தொகை முழுவதும் அச்சங்கங்களுக்கு அவசியம் தேவையா, என்றும், அவைகள் கேட்டிருக்கும் கடன்தொகைகள் சரியான

காரியத்திற்கு உபயோகப்படுத்தப்படுமோ வென்றும் தீரப்பரிசீலனைசெய்துதான் தங்களது சிபார்சுடன் ஜில்லா பாங்குக்கு அனுப்புவார்கள். துரைத்தன அதிகாரிகளால் சங்கங்களுக்கு அவைகளின் நிர்வாகத்தைப்பற்றியோ அல்லது மத்தியஸ்தங் களைப்பற்றியோ எழுதப்படும் கடிதங்கள் யூனியன் மூலமாய்த் தான் அனுப்பப்படும். துரைத்தன அதிகாரிகளும் ஜில்லா பாங்கர்களும் சங்கங்களின் சம்பந்தமாயுள்ள எவ்வித நடவடிக் கைகளையும் யூனியன் நிர்வாக சபையாரைக் கலந்துகொண்டு தான் செய்வார்கள்.

யூனியன்களின் செலவுக்காக அவைகளின் விசாரணைக்கு உட்பட்ட சங்கங்கள் தங்களுடைய மெம்பர்களுக்குக் கடன் கொடுத்து அவர்களிடமிருந்து வசூலாகும் வட்டியில் ஒரு பாகத்தைக் கொடுக்கின்றன. ஜில்லா பாங்குகளும் தங்களுடைய சங்கங்களுக்குக் கடனைக்கொடுக்கும் தொகைகளுக்குண்டான வட்டியில் ஒரு பாகத்தை யூனியன்களுக்குக் கொடுக்கின்றன. இதைத்தவிர ஒவ்வொரு சங்கமும் ஆரம்பத்தில் தான் யூனியனோடு சேர்ந்துகொள்வதற்காக 5 ரூபாய் செலுத்திவிடுகிறது. சங்கம் யூனியனுக்கு அனுப்பும் பிரதிநிதிகள் ஒவ்வொன்றுக் கும் ரூபாய் ஒன்றுவீதம் யூனியனுக்குச் செலுத்தவேண்டும். இம்மாதிரி வசூலாகும் தொகைகள் சூபர்வைசரின் சம்பளத்திற் கும் மற்றுமுள்ள செலவுகளுக்கும் யூனியன்களால் உபயோகப் படுத்தப்படுகின்றன.

மேற்கூறியபடி யூனியன்கள் முக்கியமாய்ச் சங்கங்களின் அபிவிருத்தியை உத்தேசித்தே ஏற்பட்டிருப்பதால், சங்கங்கள் யூனியன்களின் விதிக்கு விரோதமில்லாமல் நடவடிக்கைசெய்ய வேண்டும். யூனியன் நிர்வாகசபை மெம்பர்களோ அல்லது யூனியன் சூபர்வைசரோ சங்கத்தின் பரிசோதனைக்கு வந்தால், அவர்களது வேலைக்கு வேண்டிய சாதனங்களைச் சங்கம் செய்து

உதவவேண்டும். ஐக்கிய நாணயச் சங்கங்களின் மெம்பர்கள் ஒவ்வொருவரும் தங்களுடைய சங்கங்களின் அபிவிருத்திக்கு எவ்வளவு சிரத்தை எடுத்துக்கொள்ளுவார்களோ, அதேமாதிரி ஒவ்வொரு சங்கமும் அதனுடைய யூனியன் சரிவரவேலைசெய்ய வேண்டியதற்கான சாதனங்களைச் செய்யவேண்டும்.

3692



## துரைத்தனத்தார் கூட்டுறவுச் சங்கங்களுக்குச் செய்யும் சௌகரியங்கள்.

இச்சங்கங்கள் சம்பந்தமாய்த் துரைத்தனத்தார் நமக்குப் பலவித சௌகரியங்களைச் செய்திருக்கிறார்கள். இச்சங்கங்கள், அல்லது ஜில்லா பாங்குகள், அல்லது மாகாண பாங்குகளுக்கு அவரவர்களின் மெம்பர்கள் எழுதிக்கொடுக்கும் கடன் பத்திரங்களுக்கு (வெண்ணிலைக் கடன் பத்திரமானாலும் சரி, பெந்தகக் கடன் பத்திரமானாலும் சரி) ஸ்டாம்பு கிடையாது. சப்-ரிஜிஸ்தரார் ஆபீஸில் ரெஜிஸ்டர் செய்வதாகவிருந்தால், ரெஜிஸ்டர் செய்வதற்குண்டான பீஸும் (Registration fees) கிடையாது. தாங்கள் பெந்தகமாகக் கடன் கொடுக்கிறபக்ஷத்தில், பெந்தகம் வைக்கும் சொத்துக்கு வில்லங்க ஸர்ட்டிபிகேட் வாங்கவேண்டியிருந்தால், அதுவும் இனமாகக் கிடைத்துவிடும். ஏழை ஜனங்களுக்கு அதிகச்செலவை நிறுத்த துரைத்தனத்தார் இம்மாதிரியான சௌகரியங்களைச் செய்கிறார்கள்.

தவிர, இச்சங்கங்கள் சரிவர நடைபெறுவதற்கும், அப்போதைக்கப்போது இவைகளுக்கு வேண்டியவைகளைச் செய்வதற்கும் ஆங்காங்குப் பிரத்தியேகமான உத்தியோகஸ்தர்கள் துரைத்தனத்தாரால் நியமனம் செய்யப்பட்டும், இவைகளின் கணக்குகள் அடிக்கடி பரிசோதிக்கப்பட்டும், இவைகளின் நடவடிக்கைகளில் ஏதாவது தவறுதல் ஏற்பட்டிருந்தால் அவைகளை அப்போதைக்கப்போது திருத்தியும், கண்டித்தும் வரப்படுகின்றன. ஒவ்வொரு வருஷத்திய கணக்கும் இந்த உத்தியோகஸ்தர்களால் செவ்வையாகப் பரிசீலனை செய்யப்பட்டு, ஒவ்வொரு வருஷத்திய சங்கிரகக் கணக்கும் அந்தந்த உத்தியோகஸ்தர்களின் கணக்குப் பரிசீலனைப் பத்திரத்துடன் (Audit Order) வெளியிடப்படுகின்றன.

ஒவ்வொரு சங்கமும் வருஷத்திற்கொருமுறை பங்குக் காரருடைய மகாசபை கூட்டிக் கூட்டி, துரைத்தன உத்தியோகஸ்தர்களால் வெளியிடப்படும் கணக்குப் பரிசீலனைப் பத்திரத்தையும், அச்சங்கத்தின் வருஷாந்தரச் சங்கிரகக்கணக்கையும் அவர்கள் அங்கீகாரத்திற்கு வைத்து, ஒவ்வொரு பங்குக் காரருக்கும் இந்தக் கணக்குகள் சம்பந்தமாய் ஏற்படும் சந்தேகங்களை நிவர்த்திசெய்து, பிறகு இவைகள் பங்குக்காரர்களால் அங்கீகாரம் செய்யப்படுகின்றன. இச்சங்கங்களின் நடவடிக்கைகளையும், கணக்குகளையும் அடிக்கடி துரைத்தனத்தாரால் நியமனம் செய்யப்பட்ட அதிகாரிகள் கவனித்துக்கொண்டும், கணக்குப் பரிசீலனைப் பத்திரங்களை வருஷாவருஷம் பிரசுரம் செய்துகொண்டும் வருகிறபடியால், சங்கங்களால் வாங்கப்பட்ட கடன்தொகைகளுக்குத் தங்களுடைய சொந்த ஐவேஜிகள் பாத்தியப்பட்டவை என்கிற நிபந்தனை இருந்தாலும் மெம்பர்கள் கவலையில்லாமல் இச்சங்கங்களில் சேர்ந்து, அதனால் மேற்சொன்னபடி அனேகம் சௌகரியங்களை அடைகிறார்கள்.

இந்த ஐக்கிய நாணயச் சங்கங்களின் லாபத்தொகைகளுக்கு வருமான வரி கிடையாது. இச்சங்கங்களால் தங்கள் மெம்பர்களுக்கு அவர்கள் எடுத்துக்கொண்டிருக்கும் பங்குத் தொகைகளுக்காகக் கொடுக்கும் டிவிடெண்டு தொகைகளுக்கும் வருமான வரி கிடையாது.

ஓர் ஊரிலுள்ள சங்கம் மற்றோர் ஊரிலுள்ள சங்கத்திற்குப் பணம் அனுப்புவதானால் சர்க்கார் கஜானாமூலமாய்ச் செலவில்லாமல் அனுப்புவதற்கு வேண்டிய சாதனங்களைத் துரைத்தனத்தார் செய்திருக்கிறார்கள்.

போஸ்டாபீசுகளில் சேவிங்ஸ் பாங்கு கணக்குகளில் இச்சங்கங்கள்போரால் தொகைகள்போட அனுமதி கொடுத்திருக்

கிறார்கள். சாதாரணமாய்ப் பொது ஸ்தாபனங்கள்போரல் போஸ்டாபீஸ்களில் தொகைகள் போடத் துரைத்தனத்தார் அனுமதி கொடுக்காமலிருந்தாலும், பொது ஸ்தாபனங்களாகிய ஐக்கிய நாணயச சங்கங்களுக்கு அவர்கள் தொகைகளைப் போட்டுக்கொள்ள அனுமதி யளித்திருக்கிறார்கள்.

சர்க்கார் கஜானாவில் ஐக்கிய நாணயச் சங்கங்களின் பொக்கிஷப் பெட்டிகளை ஜாக்கிரதையாக வைத்துக்கொள்ள அனுமதி யளித்திருக்கிறார்கள்.

எங்கெந்த ஊரில் சங்கம் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றதோ, அவ்வூர் சர்வே படங்களையும் (Survey maps), செட்டில் மெண்டு ரெஜிஸ்தர்களையும் (Settlement Registers) இனாமாகச் சங்கங்களுக்குக் கொடுக்கிறார்கள்.

இச்சங்கங்களின் வருஷாந்தரக் கணக்குகளையும், உதவி ரெஜிஸ்தாரின் ரிபோர்ட்டுகளையும் ஜில்லா கெஜட்டில் பிரசுரம் செய்கிறார்கள்.

ஐக்கிய நாணயச் சங்கங்களில் ஒரு மெம்பரால் போடப் பட்ட பங்குத் தொகையை, அந்த மெம்பரிடம் யாருக்காவது வரவேண்டிய தொகைக்காக ஜப்தி செய்யமுடியாது.

ஒரு மெம்பரிடம் வசூலாகவேண்டிய தொகைக்காகப் பிராது செய்யவேண்டியதானால், அதற்குச் செலவில்லாமல் சங்கங்கள் பிராதுசெய்து தீர்ப்பு வாங்கவேண்டிய ஏற்பாடுகளைத் துரைத் தனத்தார் செய்திருக்கிறார்கள்.

---